Reg. No. M. 1979.




# ARUNODAYAM.

## தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை.

### The Tamil Evangelical Lutheran Journal.

Vol. 87, No. 4. ஏப்ரல் 1950

“ நீ எழும்பி வெளிச்சமாகு, ஏனெனில்
உன் வெளிச்சம் உன்னண்டை வருகிறது ”

## பொருள் அட்டவணை.



*Published by The Tranquebar Publishing House Vepery Madras*
*Manager. Rev. E. Wangsjoe B.D.*
*Editor: Rev. S. Gnanamanickam. Trichinopoly*

# மரண அறிக்கை.

எனது அருமை மனைவியும், சென்னை இராயபுரம் விடிவெள்ளி ஆலய சபை, முதல் மூப்பனுர் காலஞ்சென்ற T. S. தம்பிப் பிள்ளையின் கனிஷ்ட செல்வப் புதல்வியுமான பரிபூரணம் "பரிபூரண கர்த்தரிடத்தில் பரிபூரணம் அடைந்தார்கள்" பொன்னுக்கண்ணு அம்மாள் பரிசுத்த சமுசார மார்க்கத்தில் என்னுடன் 37-ஆண்டுகள் அன்புடன் வாழ்ந்து சென்ற பெப்ரவரிமீ 19-முதல் இருதய வியாதியினல் பீடிக்கப்பட்டு எல்லாவிதமான சிகிச்சை செய்தும் பயன்படாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதைக் கேள்விப்பட்ட தன் நாத்தனர் மகள் சௌ: தாசம்மாள் அன்று முதல் இரவும், பகலும் சகல உதவியும் செய்து தன் மார்போடு அணைத்துக் கொண்டிருக்கும்போதே சனிக்கிழமை (4-3-'50) பிற்பகல் 2-மணிக்குக் கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரை அடைந்தார்கள்.

இவர்கள் தன் கடைசி நாட்களை நன்கு உணர்ந்தவர்களாய்த் தம் கணவரிடம் இனி நான் பிழைக்கமாட்டேன். பிழைப்பேனென்று நம்பவேண்டாம் என்று சொல்லித் தம் வீட்டுக் காரியங்களை எல்லாம் நடத்த சௌ. தாஸ் அம்மாளிடம் ஒப்புவித்துவிட்டு, வாக்குப் பெற்றுக்கொண்டு உலகக் கவலை நீங்கினவர்களாய்த் தம்மைப் பார்க்கவந்த சிநேகிதர்களிடம் தாம் மறுமைக்குப் போவதைப் பற்றிச் சொல்லி நல்லாயத்தம் செய்ய வேண்டும் என்பதைப் பற்றியே பேசிக்கொண்டும், (7-10-'50) தம்மை விட்டுப்போன கனிஷ்ட புதல்வன் சொன்னவண்ணமே "போதும் கர்த்தாவே போதும், என் ஆத்துமத்தை வாங்கிக் கொள்ளும்" என்றும், தம் வேதனையையும் பொருட் படுத்தாமல் மரணதிற்குரிய ஞானப்பாட்டுகளிலுள்ள "உம்மண்டை வாரேன் இயேசுவே," "வா, வா, நித்திரையின் தோழா," "சாவே என்னைக் கொண்டுபோ," "அங்கே மெய் சந்தோஷம் உண்டு, அங்கே கோடி நீதியர்," என்னும் கவிகளைத் தெளிவாகச் சொல்லிக்கொண்டே ஓட்டத்தை முடிக்க நல்லாயத்தப் பட்டார்கள்.

அடுத்தநாள் ஞாயிற்றுக்கிழமை வீட்டில் மறைத்திரு ரேனியஸ் தேவப்பிரசாதம் அவர்கள் "உம்முடைய சித்தம் செய்யப்படுவதாக" என்ற வசனத்தின்பேரில் வெகு ஆறுதலான பிரசங்கம் செய்தபின் மறைத் திரு D. எபிநேசர் அவர்கள் ஜெபித்து ஆசீர்வாதம் கூற அவர்களது சடலம், மாலை 4-மணிக்கு அடைக்கலநாதர் ஆலயத்துக்குக் கொண்டுபோகப்பட்டது அங்கே சபை குரு மறைத்திரு R. தேவசகாயம் அவர்கள் யோவான். 16.33-ஐ ஆதாரப்படுத்தி வெகு ஆறுதலான பிரசங்கம் செய்தார்கள். பரிபூரணத்தம்மாள் "அமளியற்ற அமைதலான கிறிஸ்தவ ஜீவியம் செய்தார்கள்; "ஆயத்தமுள்ள ஆறுதலான நல்ல மரணம் அடைந்தார்கள்." இதுவே உங்களுக்கு ஆறுதலாக இருக்க வேண்டுமென்று சொல்லி முடித்தபின் மறைத்திரு S. D ஞானச்சரியம் அவர்கள் ஜெபித்து ஆசீர்வாதம் கூறினார்கள்.

பிறகு அவர்களது சடலம் நமது உத்தான தோட்டத்துக்குக் கொண்டு போகப்பட்டு மகிமையான உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக் கென்று க்ஷேமிக்கப் பட்டது. வயது. 63.

கர்த்தர் தமது பார்வைக்கு நலமானதைச் செய்வாராக (2. சாமு. 10.12) துக்கத்திலுள்ள எங்களுக்கு பர்மா, இந்தியாவிலிருந்து தந்திகள், கடிதங்கள் மூலம் ஆறுதலளித்த அனைவருக்கும் எங்களின் நன்றியைத் தெரிவிக்கிறோம்.

No 3. Padavatamman Koil St.,
P. Barracks, Madras-12. 11-3-'50 G. JOSEPH OF RANGOON.

## The Seminary at Tranquebar to be reopened.

The C. C. at their last meeting have appointed Rev. S. W. Savarimuthu Seminary Director with imediate effect. It is expected that necessary notice regarding details for the next Seminary Class will soon be published.

J. SANDEGREN.

*Kodaikanal 21-3-1950*

Reg. No. M. 1979.

# அருணோதயம்

ARUNODAYAM

தமிழ்ச் சுவிசேஷ லூத்தரன் பத்திரிகை.

Edited by Rev. S. Gnanamanickam, Rev. D. Rajarigam, M. A & Mr. G. T. Williams, B.A., L.T.,

Vol. 87, No. 4. ஏப்ரில் 1950

## பிரசங்கம் *

இப்பொழுது நான் மனுஷரைப் பிரியப்படுத்தப் பார்க்கிறேனா, கடவுளைப் பிரியப்படுத்தப் பார்க்கிறேனா? மனுஷர் தயவை நாடுகிறேனா? நான் இன்னும் மனுஷர் தயவை நாடுகிறவனேயானால் கிறிஸ்துவின் அடியானல்ல. கலாத்தியர் 1:10

தெய்வப் பணிவிடையாட்களாக நாம் இங்குக்கூடியிருக்கிறோம். இந்தப் பெரிய சிலாக்கியத்தை நமக்குக் கொடுத்த ஆண்டவருக்குத் தோத்திரம். தோத்திரிப்பதோடு நமது கடமை என்ன என்று சிந்திப்பது மிகவும் முக்கியம்.

பணிவிடையாட்கள் என்கிற வார்த்தை நமக்கு வேலையை உணர்த்துகிறது. தெய்வ ஊழியக்காரர் சோம்பேரிகளாயில்லாமல் வேலைசெய்ய வேண்டியது அவசியம். ஆனால், இந்தக்காலத்தில் உலகத்தில் எங்கும் வேலை, வேலை, வேலை என்கிற கூச்சலாக இருக்கிறது. தெய்வ ஊழியராகிய நாம் வேலை, வேலை, வேலை என்கிற அலைகளடிக்கும் ஒரு கடலிலே இருக்கிறது போல் காணப்படுகிறோம். கடலிலே மீன் பிடிக்க இறக்கப்பட்ட படகு சுழல் காற்றில் சிக்கி எங்கேயோ ஒரு பக்கம் ஒதுக்கப்படுகிறதும், கடல் ஸ்நானம் செய்ய இறங்கின மனுஷன் அலைகளினால் கொஞ்சம் கொஞ்சமாக வேறு பக்கம் அடித்துத் தள்ளிக் கொண்டு போகிறதுமான காட்சி என் மனத்தில் வருகிறது.

இந்தமூன்று நாட்களாக நாம் இந்த இடத்திலே தங்கி, நமது மேல் மோதின அலைகள் சற்று அடங்கியிருக்கும் இந்தச் சமயத்தில் சற்றுத் திரும்பிப் பார்த்தால் நல்லது. நாம் கரையிறங்கின இடம் எங்கே? நாம் தற்சமயம் இருக்கும் இடம் எங்கே? நாம் தியானிக்கும் வசனம் நமது நிலையை நாம் அறிந்து கொள்ளும்படி நமக்கு உதவியாயிருக்கும் என்று நான் நம்புகிறேன்.

* குருமார் மகா நாட்டில் மறைத்திரு. D. சின்னப்பன் அவர்கள் செய்த பிரசங்கத்தின் சுருக்கம்.

“இப்பொழுது நான் சம்மதப்படுத்தப் பார்க்கிறது மனுஷனை யோ? கடவுளையோ? மனுஷரைப் பிரியப்படுத்தப் பார்க்கிறேனா? நான் இன்னும் மனுஷரைப் பிரியப்படுத்துகிறவனேயானால் நான் கிறிஸ்துவின் அடியானல்ல.” என்பதே அந்த வசனம்.

நாம் கடவுளின் பணிவிடையாட்கள். அதுதான் நாம் கரையிறங்கின இடம். தெய்வ ஊழியர்களாக நம் எல்லோருடைய முதல் கடமை என்ன என்றும் அந்த ஊழியத்தில் நமக்கு வரும் பலத்த சோதனை என்னஎன்றும் இந்த வசனம் நமக்கு எடுத்துக் காட்டுகிறது. எஜமானைப் பிரியப்படுத்துவதே வேலையாளின் முதல் கடமை. மனுஷரைப் பிரியப்படுத்தப் பார்ப்பதே இந்தக் கடமையில் நமக்கு வரும் பலத்த, ஓயாத சோதனை.

ஊழியக்காரன் ரூபெடுத்த இயேசு நாதரின் முதல் கடமை இதுவே என்பதற்கு அன்னாரின் சரித்திரம் சான்று. ‘நீங்கள் அறியாத போசனம் எனக்கு ஒன்று உண்டு, அது என்னை அனுப்பின பிதாவினுடைய சித்தத்தைச் செய்து அவருடைய வேலையை முடிப்பதே’ என்று சீஷர்களுக்குச் சொன்னார். சிலுவையின் சரித்திரமே இந்த வசனத்தின் முதல் கடமையைக் காட்டும் வழி. ஊழியக்காரனாகிய பவுலும் தன் முதல் கடமையாக இதைத்தான் இந்த வசனத்திலும் 1 தெச. 2:4.5 லும் சொல்லுகிறார்.

பலதரப்பட்ட தெய்வ ஊழியக்காரராக நாம் இங்குக் கூடியிருக்கிறோம். நம்முடைய ஊழியத்தில் கடவுளைப் பிரியப் படுத்துவதையே நமது முதல் கடமையாக நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோமா? அதையே நமது முழுக்கடமையாக ஏற்றுக் கொண்டிருக்கிறோமா? கடவுளைப் பிரியப் படுத்தப் பார்க்கிறேனா, மனுஷனைப் பிரியப்படுத்தப் பார்க்கிறேனா? பவுல் கலாத்தியரையும் தம்மையும் கேட்கிறார். நாம் இந்த ஊழியத்திற்கு அழைக்கப்பட்டதிலிருந்து நமது தெய்வ ஊழியத்தின் பல பாகங்களையும் இந்த நேரத்தில் ஆண்டவருக்கு முன்பாகச் சோதித்துப் பார்ப்போமாக. நமது சோதனைக்கு உதவியாக நமது ஊழியத்தின் சில காரியங்களை எடுத்துக் கொள்வோம்.

நாம் செய்யும் வசனத்தின் ஊழியத்தை முதலாவதாகப் பார்ப்போம். சுட்டுப் பிரசங்கம், குட்டுப் பிரசங்கம் என்று யாரும் சொல்லிவிடுவார்களோ என்று நினைத்துக் கடவுள் நமது கையில் கொடுத்த வசனத்தின் பட்டயத்தை மனுஷருக்குப் பயந்து உபயோகிக்கும்படி சோதனை வந்ததில்லையா? இந்த அந்த வசனத்தை எடுத்துப் பிரசங்கித்தால் அது என்னையே வெட்டி விடும்; அல்லது காட்டிக்கொடுத்து விடும் என்று, விரும்பாத போசனத்தை ஒதுக்கி வைப்பது போல, ஒதுக்கி வைக்கவும், மௌனமாயிருக்கவும் நேர்ந்ததில்லையா? விசேஷமாக நமது அடக்கப் பிரசங்கங்கள்தான் எப்படிப் பட்டவை? பூனையை யானையாக்கி நம்மையும் மனுஷரையும் பிரியப்படுத்த வல்லவா நேர்ந்தது.



நமது திருச்சபையின் ஜனநாயக ஆளுகை முறையிலே நமது முதல்கடமை எவ்வாறிருந்தது. ஜனநாயகத்தில் அதன் உயர்ந்த லக்ஷியங்களையும் பலவீனத்தையும் பார்த்திருக்கிறோமே. பெரும்பான்மையான ஓட்டுகளாலே காரியங்கள் தீர்மானிக்கப்படும் முறையிலே நாம் எவ்வளவு தூரம் கடவுளைப் பிரியப் படுத்தும் வழியிலே காரியங்களைச் சாதிக்கிறோம். இந்த முறை ஆவியின் முன்னேற்றத்திற்கு எவ்வளவு தூரம் ஒத்தாசையாயிருக்கிறது. பெரும்பான்மையோரைப் பிரியப்படுத்தினால் போதும் என்கிற பலமான சோதனை நம்மை நெருக்கிக் கொண்டதில்லையா?

நமது சபைச்சந்திப்பு வேலை எப்படி? குற்றம் குறைகளை எடுத்துக்காட்டி ஆத்துமாக்களைக் கடவுளுக்கு ஆதாயப்படுத்தப் பார்த்தோமா? எல்லாவற்றையும் மூடிவைத்து ‘உங்களைப்போல் உண்டா என்று முகஸ்துதி பேசி ஆத்துமாக்களை மோசம் போக்கினதில்லையா?

திருச்சபை ஐக்கியத்தைப்பற்றி அது வேண்டும் வேண்டாம் என்று பேசுகிறோமே. யாரைப் பிரியப்படுத்த? லுத்தரையா? கல்வீனையா, வெஸ்லியையா?

நமது சுவிசேஷ ஊழியந்தான் என்ன? பாவ விமோசனத்திற்காகக் கிறிஸ்துவைத் தேடி வருகிறவர்களைத்தான் சபையில் சேர்க்க வேண்டுமென்கிற உயர்ந்த லக்ஷியத்தில் ஒரு வருஷம் வேலை நடக்கிறது. பலன்கிடைக்கா விட்டால் மேலானவர்கள் நம்மைப் பிரயோசனமில்லாதவன் என்று சொல்லிவிடுவார்களோ என்று நமது லக்ஷியத்தைத் தளர்த்தி எண்ணிக்கையை நோக்கிப்பார்க்கும் நிலைமைக்கு வந்ததில்லையா?

சபைகளில் ஏற்படும் குழப்பங்களை அடக்கி அமைதி நிலவச் செய்ய நாம் கையாளும் வழிகள் எதைக்காட்டுகிறது? யூகம், தந்திரம், புத்தி சாலித்தனம், விட்டுக் கொடுத்தல், சமயோசிதம் என்கிற வார்த்தைகளின் வழியாய்க் காரியங்களைச் செய்யத் தூண்டப்படுகிறோமே யொழிய இதிலே கடவுளைப் பிரியப்படுத்த வழி என்ன என்பதை யோசிப்பதோ கேட்பதோ அபூர்வம்.

இன்னும் எத்தனையோ திருஷ்டாந்தங்களை நாம் எடுத்துப் பார்க்கக்கூடும். என் ஊழியத்தில் வந்த தெய்வ ஏவுதலையும் சோதனைகளையும் உங்களோடு பகிர்ந்து கொண்டேன். கடவுளைப் பிரியப்படுத்த வேண்டும் என்கிற கடமைக்கும் நாம் இருக்கிற நிலைமைக்கும் எவ்வளவு தூரம் இருக்கிறது. ஆண்டவர் இன்று மறுபடியும் நமது முதல் கடமையை நமக்கு எடுத்துக் காட்டி அதையே நமது முழுக்கடமையுமாக ஏற்றுக்கொள்ளும்படி நம்மை அழைக்கிறார். கடவுள் தாமே இந்தக் கடமையை நிறைவேற்ற வேண்டுமென்கிற அன்போடு கூடிய வைராக்கியத்தையும், தாழ்மையோடு கூடிய தைரியத்தையும் நம் ஒவ்வொருவருக்கும் அருள் செய்வாராக.

---

## தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் திருச்சபையும் சபை ஐக்கியமும்.

சென்ற பெப்ருவரியீ திருச்சி தரங்கை வாசத்தில் நடைபெற்ற குருமார் கூட்டத்தில் **Lund** நகர கண்காணியார் உயர் மிகு மறைத் திரு **A. Nygren** பண்டிதர் பல பல சொற்பொழிவுகள் செய்யும் படி நம் கண்காணியார் உயர் மிகு மறைத்திரு **J. Sandegren** சாஸ்திரியார் ஒழுங்கு செய்திருந்திருந்தார். நமது சபை குருக்கள் மிஷனேரிமார்களையன்றி ஆர்க்காடு லுத்தரன் சபையைச் சேர்ந்த 12 குருமாரும், மிசூரி லுத்தரன் சபையைச் சேர்ந்த 3 குருக்களும் இம்மகா நாட்டில் கலந்து, சபை ஐக்கியத்தைப் பற்றிய முக்கிய பிரச்னையைக் குறித்துப் பேச சந்தர்ப்பம் கிடைத்தது. உயர் மிகு மறைத் திரு. **Nygren** அவர்கள் உலகப் பிரசித்தி பெற்ற வேத சாஸ்திரப் பண்டிதர். அப்போஸ்தலர் காலத் திருச்சபையைக் குறித்தும், சபை சீர்திருத்தலைக் குறித்தும் அவர் ஆழ்ந்த வேத ஆராய்ச்சி செய்துள்ளார். 1937-ம் ௵ எடின்பரோ நகரில் "விசுவாசமும் சபை ஒழுங்கும்" (**Faith & Order**) என்னும் பொருள் பற்றி நிகழ்ந்த மகா நாட்டில் "கிருபை" என்னும் தலைப்பில் அவர் கொண்டு வந்த தாக்கீது ஒப்புக் கொள்ளப் பட்டது. மேலும் அவர் இயற்றிய பல நூற்களும் ரோமர் நிருப விஸ்தரிப்பும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பெற்றுப் பிரசுரமாயிருக்கின்றன. பெப்ருவரியீ 7-9 தேதிகளில் திருச்சியில் செய்த 3 சொற்பொழிவுகளின் மூலமாய் அங்குள்ள சுவிசேஷ சபைகள் சுவிசேஷ செய்தியின் முக்கியத்தை ஆழ்ந்து கவனிக்க ஏவி எழுப்பினர். அவைகளின் தலைப்பு:— 1. தேவ வெளிப்படுத்தலும் வேத வசனமும். பழைய ஏற்பாடும் புதிய உடன் படிக்கையும் 3. வேத ஆராய்ச்சி. பல்லாண்டுகளாக **Lund** சர்வ கலாசாலையில் முக்கிய பாண்டித்தியம் வகித்த அவர் போன ஆண்டில் அகில உலக லுத்தரன் ஐக்கிய சங்கத்தின் தலைவராகவும், **Lund** அத்தியக்ஷராகவும் நியமனம் பெற்றார். செராம்பூரிலும், பெனகாரியாவினும், முக்கியமாய்த் திருச்சியிலும் அவர் செய்த உபன்னியாசங்கள் மிக்க எழுப்புதல் உண்டாக்கின. அப்போஸ்தலர் பெற்றுக் கொண்ட கலப்பற்ற சுவிசேஷத்தின் உண்மை சபையின் சீர்திருத்திகளால் நிலை நாட்டப் பட்டதென்பது அவர் வலியுறுத்தி விளக்கிய முக்கிய செய்தி. மனிதனின் புண்ணிய கிரியைகளால் திருச் சுவிசேஷத்தின் மகத்துவம் குன்றுதபடி : வசனமொன்றே, விசுவாச மொன்றே, கிறிஸ்து ஒருவரே என்னும் புதிய ஏற்பாட்டின் அடிப்படையான பொருளையே சீர்திருத்திகள் திரும்பவும் நிலை நாட்டினர்கள். நற் கருணை விருந்தில் இதர சபைகளோடு கலந்து பங்கு பெறுவதைக் குறித்துப் பேசுகையில், திரு இராப் போஜன விருந்தில் நாம் பெற்றுக் கொள்ளும் பாவமன்னிப்பும், புத்துயிரும் தேவ கிருபையின் செயலேயாதலால், இப்பரிசுத்த காரி



யத்தில் மனுஷீகத் தடைகளை எழுப்புவது சுவிசேஷப் போக்குக்கு ஒவ்வாதெனவும் விளக்கினர்.— சுவீடனிலிருந்து வந்திருந்த மிஷன் சங்க டிரெக்டர் **A. Baefverfeldt** ஐயர் **Bankok** இல் நடந்த மகா நாட்டைக் குறித்தும், லைப்சிக்மிஷன் டிரைக்டர் **C.Ihmels** பண்டிதர் ஜெர்மனியிலுள்ள சபை ஐக்கியத்தைக் குறித்தும் பேசினர்கள்.

த. சு. லு. சபையின் குருக்களின் இவ் வருஷாந்தர மகா நாட்டில் வேறு இருலுத்தரன் சபைகளும் கூடியஇத் தருணத்தில் நமது கண்காணியார் வெகு திறமையோடு தலைமை வகித்து மறைத்திரு **C. G. Diehl**, சவரிமுத்து ஐயர்மாரின் உதவியையும் பெற்று நடத்தினர். சபை ஐக்கியத்திற்கு ஆதாரமாக 3 லுத்தரன் சபைகளின் 9 பிரதிநிதிகளால் வரைந்து வெளியான விஞ்ஞாபனம் ஏகோபிதமாய் ஒப்புக்கொள்ளப்பட்டது. இது அந்தந்தச் சபைகளைக் கட்டுப்படுத்தாது. தென்னிந்திய திருச்சபையோடு பேச்சுத் தொடர்பு வைத்துக் கொள்வது நலமெனத் தீர்மானிக்கப்பட்டது. தென்னிந்திய ஐக்கிய சபை தன் முயற்சிகளை இன்னும் பரந்து விசாலிக்க விரும்பினுல் லுத்தரின் சின்னஞான உபதேசத்தைச் சுவிசேஷத்தின் சுத்த போதனைச் சுருக்கமாகச் செலவாணிக்குக் கொண்டு வருதல் லுத்தரன் சபையாருக்கு இது சம்பந்தமான ஓர் உறுதியளிக்கும் சான்ருகும் எனவும் பேசப்பட்டது. சீர்திருத்தியாகிய லுத்தர் நமது ஊழியத்தின் தொடக்கத்திலேயே, இளைஞருக்கும் எளிதில் விளங்கக் கூடிய நடையிலும் பெரியோரும் கல்விமான்களும் ஆத்மீக நன்மையடையக் கூடியதுமான முறையில் வரைந்த இந்நூல் கிறிஸ்தவ கலையின் ஓர் சிறந்த கிரந்தமாகும். உப்சாலாவில் பிரதம அத்தியக்ஷராயிருந்து காலஞ்சென்ற **Soderblom** பண்டிதர் கிறிஸ்தவ விசுவாசத்தின் ஆதி நியாயங்கள் அடங்கிய இந்நூலை வரி வரியாகப் படிக்க மாத்திரமல்ல, வரிவரியாக ஜெபிக்கவும் வேண்டிய நூலென்றார்.

தமிழ் நாட்டிலுள்ள லுத்தரன் சபைகள் இன்னும் நெருங்கி வருவதுமன்றி ஆந்திர நாட்டு லுத்தரன் சபைகளோடும் உறவில் பலப்படுவது நலமென இம்மகா நாட்டில் பேசப்பட்டது. லுத்தரன் ஐக்கிய சங்கத்தார் ஏற்படுத்திய வேத சாஸ்திர நிபுணரால் வரையப்பட்ட போதக விபரம் லுத்தரன் சபைகளின் மூலாதாரப் போதனைகளை உடன்பாடான விதமாய் வெளியிட்டிருப்பது நமது கவனத்தைக் கவரத்தக்கது. லுத்தரன் சபைக்கு விசுவாச ஐக்கியம் இன்றியமையாதது. ஒழுங்குக்குரிய காரியங்களில் ஏற்கனவே தென்னிந்திய ஐக்கிய சபையார் வரைந்திருக்கும் முறை லுத்தரன் போக்குக்கு முரண்படாதென நம்புகிறோம். ஐக்கியத்திற்கான ஏவுதல் கடவுளால் நடப்பதென்றும், இந்தியாவைப் போன்ற ஒரு பெரிய நாட்டில் அதன் அவசியத்தைத் தென்னிந்திய ஐக்கிய சபைக்கும் நமக்குமுள்ள தற்கால நல்லுறவைக் கொண்டும் எளிதில் அறியலாமென்றும் மகா நாட்டார் உணர்ந்தனர். ஐக்கியத்திற்கான இவ்வசைவை ஆண்டவர் முன்னேறச் செய்வாரென நம்பலாம்.

இது சம்பந்தமாய் நடந்த தர்க்கங்களில் சுவிசேஷத்துக் குண்மையுள்ளவர்களாக நாம் விளங்க வேண்டு மென்பது வற்புறுத்தப்பட்டது. தமிழ் நாட்டிலும் ஆந்திர தேசத்திலுமுள்ள லுத்தரன் சபைகள் ஒன்று சேர்ந்து ஐக்கிய சபைக்கு அழியா ஈவுகளைக் கொடுத்து உதவிபுரிய வேண்டும். இந்நோக்கத்துடன் வேத சாஸ்திர ஆராய்ச்சிக்கென ஓர் உயர்தர கல்லூரியை நிறுவ வேண்டிய அவசியம் வற்புறுத்தப்பட்டது.

லுத்தர் சாஸ்திரியார் தாமே நமது சபை தம் பேரால் அழைக்கப்படக்கூடாதெனத் திட்டமாய்ச் சொல்லியும் நாம் நம்மை லுத்தரன் சபை யென்றழைப்பது நமது துரதிஷ்டமென உயர்மிகு மறைத் திரு. Nygren அவர்கள் குறிப்பிட்டார். நமது சபைக்கிட வேண்டிய சரியான பேர் "அப்போஸ்தல விசுவாச சபை" என்றும், பலவிதமாய்ப் பிரிந்து கிடக்கும் விசுவாசிகளின் மெய் ஒருமையே ஐக்கிய சபை ஏற்பட ஏவுதலளிக்க வேண்டிய மூல காரணமென்னும், இந்த உள்ளான ஐக்கியத்தை உலகத்துக்கு வெளிப்படுத்துவதே இந்நூற்றூண்டில் நமது மேல் வைத்திருக்கும் கடமை யென்றும் சொன்னார்.

அருளகம், தாம்பரம்
14-2-1950

J. D. ஆசீர்வாதம்.

---

## பத்திராதிபர் குறிப்புகள்

நமது சபைகளில் ஆவிக்குரிய ஜீவியம் குன்றிப் போகையில், குருமாராகிய நாம் அதற்குக் காரணம் நம்மிடத்திலுண்டோவெனத் தற்சோதனை செய்வது மிகவும் அவசியம். ஏப்ரில் மீ கடைசி வாரத்தில் மகா முக்கியமான சினோட் கூட்டம் தரங்கையில் நடைபெற ஒழுங்குகள் செய்யப்படுகின்றன. அதற்கு முன் குருமாராகிய நாம் நம்மை அம்மகா நாட்டுக்கென்று ஆயத்தம் செய்துகொள்ள இம்மாத வெளியீடு உதவி புரியுமென நம்புகிறோம்.

மேலும், அம்மகா நாட்டு நடபடிகள் தேவ சித்தத்திற்கிசைய நடைபெற நாமெல்லோரும்—குருக்களும் சபையாரும்—தினந்தோறும் முழங்காலூன்றி ஜெபம் செய்வது அவசியம். மகா நாட்டிற்கு முந்தின வாரத்தில்—அதாவது ஏப்ரில் மீ 19வ யாகிய புதன் காலையிலோ மாலையிலோ நமது ஆலயங்களிலெல்லாம், இது சம்பந்தமாக விசேஷித்த ஜெப ஆராதனை நடத்த உயர் மிகு மறைத்திரு கண்காணியார் அனுமதியளித்திருக்கிறார். நமதுசபையின் ஆவிக்குரியமுன்னேற்றத்தை விரும்புகிற பெரியோரும் சிறியோரும் அத்தினத்தை ஓர் உபவாச தினமுமாக்கினால் நலமென நம்புகிறோம். தேவசித்தம் நமது சபைகளில் நிறைவேறத்தக்கதாய், சுய நலங்கருதாமல், ஆண்டவரின் மகிமையையும், சபைகளின் நன்மையையுமே இலக்காக வைத்து சேவைபுரியக் கூடிய உண்மையும், பக்தியுமுள்ள தேவ



தாசரை ஆண்டவர் நமது திருச்சபையின் ஆலோசனைச் சங்க அவயங்களாகத் தேர்தல் செய்யப்பட உதவி புரிவாராக:—கர்த்தாவே, எங்களுக்கிரங்கும்!

இந்தோனேசியாவில் மிஷனேரியாக சேவைபுரிய, முன் புதுக்கோட்டை மிஷன் உயர்தர கலாசாலையில் தலைமையாசிரியராயிருந்து, சென்ற ஒரு வருஷம் திருப்பத்தூர் கிறிஸ்து குல ஆஸ்ரம சம்பந்தமாய்த் திருப்பணி நடத்திவந்த உயர் திரு சா. தேவநேசன் பிரசங்கியாரை நியமித்திருக்கிறார்கள். கர்த்தர் உயிர்த்தெழுந்த பண்டிகை தினத்தில் (ஏப்ரில் 9வ) அவருக்குக் குருப்பட்டாபிஷேகம் கோயமுத்தூரில் நடைபெறுமெனத் தெரிகிறது. அவருக்காக யாவரின் ஜெபமும் கோரப்படுகிறது. ஏற்கனவே பலவரங்களும், கல்வித் தேற்சியும், கிறிஸ்தவ சேவையில் சிறந்த அனுபவமுள்ள இத் தொண்டனுக்குத்தமது தேவாவியின் விசேஷித்த வரங்களை ஆண்டவர் அளிப்பாராக.

பெரிய வெள்ளிக்கிழமையாகிய பெரிய தவசு நாளன்று நமது சபைகள் தோறும் சுய வெறுப்பின் காணிக்கைகளைச் சேர்த்து சுதேச மிஷனேரி சங்கத்திற்கும், தியாக்கோனிமார் ஸ்தாபனத்திற்கும் பகிர்ந்து கொடுக்கும் பழக்கம் பல இடங்களில் செலாவணியிலிருக்கிறது. இந் நல்ல பழக்கத்தை நமது சபைகளெங்கும் அனுசரிக்கக் கோருகிறோம். தியாக்கோனிமார் ஸ்தாபனத்திற்குப் பணம் மாத்திரமல்ல, குணமுள்ள பெண்களும், நமது மனமார்ந்த ஜெபங்களும் தேவை.

---

### சுதேச மிஷனரி சங்கம்

லுத்தரன் சுதேச மிஷனரி சங்கக் காரியதரிசி. சந்திப்புக் குறிப்புகள்

தெற்கு ஆந்திரா லுத்தரன் சபைகள் சந்திப்பு விபரம்.

| | | | |
|---|---|---|---|
| 11-2-50 | ... சூலூர் பேட்டை | 16-2-50 | ... காளாத்தி. |
| 12-2-50 | ... நாயுடு பேட்டை | 17,18,19, | ... கோரேர் வட்டாரம். |
| 13&14 | ... கூரேர், வட்டாரம் | 20, 21, | ... ரேணிகுண்டா. திருப்பதி. |
| 15-2-50 | ... வெங்கட்டகிரி | 22-2-50 | ... புத்தூர் |

நல்ல ஒழுங்கான திட்டம் வகுத்துச் சபைகளின் முக்கிய இடங்களையும் சந்திக்கும் படியான ஏற்பாடாகி யிருந்தது. எல்லா இடங்களிலும் மகிழ்ச்சியான வரவேற்பு கொடுத்து உற்சாகமாகக் கூட்டங்களுக்கு வந்தார்கள். இங்கே போதிய அளவு சுதேச மிஷனரி சங்கத்தைப் பற்றித் தகவல்கள் தரப்பட வில்லை என்பதே குறை கூறலாக இருந்தது. அதைக்கூடிய வரையில் நான் தவிர்த்தேன்.

எல்லா சபைகளிலும் தனி சுதேச மிஷனரி சங்க நலனைப் பாதுகாக்கும் கிளைச்சங்கங்கள் நியமனம் செய்யவும் மாத வேண்டுதல் நாள் சு. மி. ச. வுக்கு ஆசரிக்கவும் பொருள் உதவியை அதிகரிக்கப் புதிய ஏற்பாடுகள் செய்யவும் வாக்களித்தார்கள், மேலும் தனிப்பட்ட முறையில் சூலூர் பேட்டை என்ற இடத்தில் ரீவாவிலே ஆரம்

பிக்க எத்தனம்செய்யும் வைத்திய வேலைக்காகப் பண்டிகை ஒன்று நடத்தி விசேஷ பொருள் உதவி தருவதாகவும் வாக்களித்துள்ளார்கள். எங்கும் போலவே இங்கும் மிஷனரி மார்களும் போதகர்மார்களும் ஏனையோரும் நல்லாதரவளித்துத் தங்கள் இடைவிடா உதவிக்கான அறிகுறிகளைக் காண்பித்ததற்கும் எனக்குச் செய்த எல்லா உபசரிப்புகளுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு தங்கள் தாழ்மையுள்ள ஊழியன்,

கூடலூர், பு. ட. } எசா. கிறிஸ்துதாஸ்
27-2-1950 }

---

## குருமாரின் உன்னத நிலை

பழைய ஏற்பாட்டில் உடன் படிக்கைப் பெட்டியை லேவியரும் ஆசாரிமாரும் சுமந்து செல்லுகையில் அவர்களுக்கும், பின்னால்வருகிற ஜனக் கூட்டத்திற்கும் இடையே கிட்டத்தட்ட இரண்டாயிரம் முழத் தூரமிருக்க வேண்டும். (யோசுவா : 3, 4) பரிசுத்த பெட்டியைச் சுமந்த ஊழியர் கர்த்தருடைய ஜனத்தினின்று பிரித்தெடுக்கப்பட்டவர்கள். பழைய ஏற்பாட்டில் பரிசுத்தம் என்பது பிரித்தெடுக்கப்படுதலைக் குறிக்கும். முன்னே நடந்தவர்கள் ஆசாரியரும், லேவியரும். பின்னே நடந்தவர்கள் தேவ ஊழியரல்லாதவர்கள். இருவகுப்பாருக்குமிடையே 2000 முழத்தூரமிருக்க வேண்டும். இதற்குள்ள ஞான அர்த்தத்தைத் தற்கால குருமாரும் உற்று நோக்குவது நன்மை விளைவிக்கும். நம்முடைய வாழ்க்கை, நம்மிடம் போதனை பெறுவோருக்கு மேல் சிறந்து முற்போக்குடையதாய் விளங்க வேண்டும் என்பதே அதன் கருத்தெனத் தோன்றுகிறது.

நீண்ட வெள்ளை அங்கியும், இடைக்கச்சையும் முதற் பார்வையிலேயே நம்மைக் குருமாரெனக் காட்டி விடுகிறது. பிறமதத்தினரும் இவ்வுடை தரித்த நம்மைக் காணும்போது நமது ஊழியம் இன்னதென்று அறிந்து கொள்வதன்றி, நம்முடைய பேச்சு, விருப்பங்கள், தேட்டங்கள் எத்தன்மையானவை என்பதை ஆராய்ந்து பார்க்கிறார்கள். சிறிது நேரம் நம்மோடு பேசிப் பழகியவுடன் நமது மனப்பான்மை மேலான நாட்டமுள்ளதோ, கீழான தேட்ட முள்ளதோ, புகழ்ச்சியை விரும்புவதோ, இகழ்ச்சியைச் சகிக்கக் கூடியதோ என்று எளிதில் அறிந்து கொள்ளுகிறார்கள். அன்பே உருவெடுத்து வந்த இயேசுவின் குண லட்சணங்களில் சிலவாகிலும் நம்மிடம் விளங்கினால் இயேசுவுக்கு மேன்மை; இயேசு விரும்பாத குணலட்சணங்கள் நம்மிடம் காணப்பட்டால், இயேசுவுக்கு நிந்தை. குருமாராகிய நம்மிடத்தில் எதிர்பார்க்கப்படுகிற உன்னத குண லட்சணங்கள் நம்மிடம் காணப்படுகின்றனவோ என்பதைப்பற்றி நாம் நம்மைத் தினந்தோறும் தற்சோதனை செய்வது இன்றியமையாத காரியம்.



நமது சபையாரும் நம்மை உற்று நோக்கிக் கொண்டிருக்கிறார்கள். சீட்டு விளையாட்டிலோ, படக்காட்சி சாலையிலோ குருமார் அடிக்கடி காணப்பட்டால் அவர்களைப்பற்றிய மதிப்பு ஏறுவது சந்தேகந்தான். அப்படியே அவமானச் செய்கையும், புத்தியீனப்பேச்சும், பகடியான வார்த்தையும் குருமாரிடம் காணப்படுகையில் (எபே. 5, 4,) நம்மைப்பற்றிய மதிப்பைக் குறைவாக்கிக் கொள்ளுவோம். பவுலப்போஸ்தலன் சொல்லுகிறபடி ஒரு குரு "பொறுமையுள்ளவனும், சண்டை செய்யாதவனும், பண ஆசையில்லாதவனுமாயிருந்து, தன் சொந்தக் குடும்பத்தை நன்றாய் நடத்துகிறவனும், சம்பூரண நல்லொழுக்கத்தோடு தன் பிள்ளைகளைக் கீழ்ப்படியப் பண்ணுகிறவனுமாயிருக்க வேண்டும்." (1. தீமோ. 3, 3. 4)

எங்களை எந்த மனுஷனும் கிறிஸ்துவின் ஊழியக்காரரென்றும் கடவுளுடைய இரகசியங்களின் உக்கிராணக்காரரென்றும் எண்ணிக் கொள்ளக் கடவன் என்று பவுலப் போஸ்தலன் சொல்லுகிறார். (1 கொரி. 4 : 1,) அதின்படி நாம் மனுஷருக்கு ஊழியரல்ல, கிறிஸ்துவுக்கு ஊழியர், கடவுளுடைய இரகசியங்களின் உக்கிராணக்காரர். இது நமக்குக்கிடைத்த சலாக்கியமும் உத்திரவாதமுமாகும். கடவுளின் ஊழியர் மனுஷருடைய பிரியத்தையும் புகழ்ச்சியையும் நாடி உழைக்காமல், கடவுளின் சித்தத்தையும், வழிகாட்டுதலையும் அறிந்து சேவை புரிவார்கள். சபையாருக்கு அவர்களே உண்மையான வழிகாட்டிகளாக விளங்க வேண்டியவர்கள்; கை காட்டி மரங்களைப்போல் ஒரே நிலையிலிருந்தல்ல, கூடப் பிரயாணம் பண்ணி உடன் பிரயாணிகளோடு உச்சித பட்டணத்துக்குப் போக வழி நடத்துகிறவர்கள்.

இவ்வாறு நமது ஊழியம் உன்னத தேவனுக்கென செய்யும் மேன்மை பொருந்தியதாயிருந்தாலும், நாம் தாழ்மையுள்ளவர்களாகவே விளங்க வேண்டும். இயேசுவானவரை எருசலேமுக்குச் சுமந்து நடந்த கழுதைக் கொப்பானவர்கள் நாம். கழுதை துணி மணிகளால் மூடப்பட்டது. அதின் மேல் ஏறியிருந்த இயேசுவான வரையே திரள் ஜனங்கள் நோக்கி அவர் புகழ்க்கென ஓசன்னா பாடினார்கள். வழியிலே விரித்திருந்த வஸ்திரங்கள் மேல் இயேசுவைச் சுமந்த கழுதை நடந்தது. தனக்கு மேன்மையைக் கழுதை தேடிக் கொள்ளவில்லை. என்றாலும் அதற்கு மதிப்பு கிடைத்தது. நாம் நமக்கே மதிப்பைத் தேடிக்கொள்ள விரும்புகையில் நமது அரசராகிய இயேசுவின் மதிப்பைக் குறைக்கப் பார்க்கிறவர்களாக விளங்குவோம். "அவர் பெருக வேண்டும், நானோ சிறுக வேண்டும்" என்பது ஸ்னானக யோவானின் குறிக்கோள்.

காரியாதிகளின் நிலைமை தற்காலத்தில் வேறு விதமாய் மாறி வருவதாகத் தோன்றுகிறது வயதிலும், அனுபவதிலும் குறைவுள்ள சில குருமார் தாங்கள் ஆலோசனை சங்கத்தில்

அவயவங்களாக வேண்டுமென்னும் நோக்கங்கொண்டு வோட்டுக்காக வேட்டையாடும் வேலையிலே ஈடுபட்டு, தங்கள் ஊழியத்தின் மேன்மையை மறக்கிறவர்களாகவும் மறுக்கிறவர்களாகவும், கடிதப்போக்கு வரவு செய்கிறார்களெனக் கேள்விப் பட்டு வியாகுலப் படுகிறோம். குருமார் செய்யத்தகாத இழிவான காரியமிது. வோட்டுக்காகப் பிச்சைக்காரனைப் போல் சபையாரிடம் பல்லைக் காட்டிக்கொண்டு நிற்பது நமது மேன்மையான நிலைமைக்கு ஏற்காது. ஆலோசனை சங்கப் பதவிக்கு ஏற்ற குருமாரைக் கொண்டு வர சபையார் முயலுவதில் விபரீதமொன்றுமில்லை. ஆகிலும் இப்பதவிக்குத் தகுதியற்ற குருமார் வோட்டு வேட்டையில் முனைந்து நிற்பது அறிவீனம், அநியாயம் என்றே சொல்ல வேண்டும். ஆண்டவர் அவர்கள் உள்ளத்தைத் தட்டி யெழுப்பித் தங்கள் சீர் கெட்ட நிலைமையை உணர்ந்து கொள்ள யாவரின் கரிசனமான ஜெபமும் தேவை.

தேவ ஊழியத்தில் ஈடுபடுவோரின் பல வகுப்புக்களைக் குறித்துப் பவுலப்போஸதலன் 1கொரி. 12:28இல் எழுதும் வாக்கியத்தை நாம் கவனித்தல் அவசியம் என்று வேத சாஸ்திர பண்டிதர் S. Zehme சாஸ்திரியார் பன்முறை சொன்னதுண்டு: "முதலாவது அப்போஸ்தலரையும், இரண்டாவது தீர்க்க தரிசிகளையும், மூன்றாவது போதகர்களையும் பின்பு வல்ல செயல்களையும், பின்பு குணமாக்கும் வரங்களையும், உபகார ஊழியங்களையும், ஆளுகைவரங்களையும், பலவித நாவு வரங்களையும் கடவுள் சபையிலே ஏற்படுத்தினார்". சாஸ்திரியார் இவ்வாக்கியத்தை ஆதாரமாக வைத்து—சபை ஆளுகை திருச்சபையிலுள்ள தாழ்வான ஊழியங்களிலொன்று என்றும், அதை விட உன்னத நிலையுள்ள வசனத்தினூழியமாகிய முதல் மூன்று ஊழியங்களே சபை ஆளுகைக்கு மேற்பட்டவை என்றும் சொல்லுவார். நம்மை ஆண்டவர் மேன்மை பொருந்திய வசனத்தினூழியத்தில் வைத்திருக்கையில், அவரே நம்மை நடத்தினாலன்றி தாழ்வான ஊழியமாகிய சபை ஆளுகை வேண்டுமென்று நாம் பிச்சை எடுப்பானேன்?

## பாவமன்னிப்புக் கூறல்

சென்ற மாத அருணோதயத்தில் "சா.ப." என்று கையொப்பமிட்டு, பாவசங்கீர்த்தன ஆராதனையில் குருவானவர்: "உன் பாவங்களை உனக்கு மன்னிக்கிறேன்" என்று சொல்வது சரியோ, "உனக்குப் பாவமன்னிப்பை அறிவிக்கிறேன்" என்று சொல்வது சரியோ என்று போடும் வினவுக்கு விடை பகரப்பார்க்கிறேன். தேவாராதனையிலுள்ள ஞான முறைமை களின் புஸ்தகத்தின் 2ம் பங்கின் 58ம் பக்கத்தினடியில் அச்சிட்டிருப்பதின்படி குருவானவர் இவ்விரு விதங்களிலும் பாவமன்னிப்பைக் கூற இடமுண்டு. ஆயினும் குருவானவர் தனித்த ஆளாக மன்னிப்பை அறிவிக்கவோ, மன்னிக்கவோ அதிகாரமுள்ளவரல்ல.



லுத்தர் ஞானோபதேசம் 25ம் பக்கத்தில் பாவ சங்கீர்த்தனமாவதென்ன என்னும் வினவுக்கு லுத்தர் கொடுக்கும் விடையில்: தேவ ஊழியக்காரர் அறிவிக்கிற பாவ மன்னிப்பினால் பாவங்கள் பரமண்டலத்தில் பராபரனுக்கு முன்பாக மன்னிக்கப் பட்டிருக்கிறதென்று சந்தேகப்படாமல் விசுவாசித்து, அதைப்பராபரனால் அடையும் மன்னிப்பாய் ஏற்றுக்கொள்ளுகிறதை லுத்தர் வரைகிறார். மேலும் அடுத்த பக்கத்தில் திறவு கோல்களென்னும் அதிகாரத்தைக் குறித்து அவர்: அது தெய்வ எத்தனமான மனஸ்தாபம் உடையவர்களுக்குப் பாவங்களை மன்னிக்கவும், அப்படி யில்லாதவர்களுக்கு அவர்கள் குணப்படாதிருக்குமட்டும் பாவங்களைச் சுமத்தி வைக்கவும், கிறிஸ்து பூமியிலுள்ள தமது சபைக்குக் கொடுத்த விசேஷித்த அதிகாரமாயிருக்கிறது என்கிறார். திருச்சபை தனக்குக் கிடைத்த இவ்வதிகாரத்தைக்கையாளும் போது பாவ மன்னிப்பை அறிவிக்கிறேன் என்றாலும் பாவங்களை மன்னிக்கிறேன் என்றாலும் ஒன்றுதான். மேலும் பாவ மன்னிப்பைக் கூறுமுன் குருவானவர் சொல்லும்: "நீங்கள் செய்த பாவ அறிக்கை உண்மையாயிருந்து, நீங்கள் மனஸ்தாபப்படுகிற இருதயத்தோடு இயேசு கிறிஸ்துவின் முன்னிலையாய்ப் பாவ மன்னிப்பைத் தேடுவீர்களானால் நான் இயேசு கிறிஸ்துவின் கட்டளைப்படி" என்னும் வார்த்தைகளையும் நாம் மன்னிப்புக் கூறுதலோடு சேர்த்து அர்த்தப்படுத்த வேண்டும். இதன்படி மெய்யாய்க் குணப்படும் பாவியே விசுவாசக் கைகளால் பாவமன்னிப்பை இயேசு கிறிஸ்துவின் மூலமாய்ப் பெற்றுக் கொள்ளுகிறான். வேஷக் கிறிஸ்தவன் தலைமேல் குருவானவர் கை வைத்து "உன் பாவங்களை உனக்கு மன்னிக்கிறே"னென்று எத்தனை முறை சொன்னாலும் அவன் மன்னிப்பைப் பெற்றுக் கொள்ளுகிறதில்லை.

## திருச்சபைச் செய்திகள்

1. சென்னை புரசை லுத்தரன் மிஷன் Fabricius உயர்தர கல்லூரியின் நூற்றாண்டு விழா சென்ற பெப்ருவரி மீ 9, 10, 11-ம் தேதிகளில் வெகு சிறப்பாய்க் கொண்டாடப்பட்டது. சென்னை அரசாங்க சபை மந்திரிகளிலொருவராகிய உயர்மிகு திரு M. பக்தவத்சலம் என்னும் பெரியார் தலைமை வகிக்க, தாம்பரம் வித்யாகலாசாலையின் தலைமைப் பண்டிதர் மறைத்திரு, A. G. Boyd என்பார் சிறந்த சொற்பொழிவாற்றினார். முதல் நாளில் கல்விப் பொருட்காட்சியும், ஆகாசவாணி யந்திரமொன்றும் பாடசாலையில் திறந்து வைக்கப்பட்டது. அன்று மாணவருக்குப்பரிசுகளும், தேனீர் விருந்தும் நடைபெற்றன. அடுத்த நாளில் பெற்றோரும் பெரியோரும் பொருட்காட்சி சாலையை சந்திக்கவும், பழைய மாணவர் சங்கம் கூடிவரவும், நாடகக் காட்சியைக்கண்டு களிக்கவும் செலவாயிற்று. சனிக்கிழமை ஊர்வலமாய் அடைக்கல நாதர் ஆலயம் செல்ல, அங்கு ஸ்தோத்திர

ஆராதனை நடைபெற்றது. பிறகு முன் பல ஆண்டுகளாய்ப் பாடசாலையின் தலைமை வகித்த பிரமுகர்கள், தலைமை ஆசிரியர்களின் உருவப் படங்கள் திறந்து வைக்கப்பட்டன. கல்லூரியின் நூற்றுண்டு சரிதமும், அதற்கென்று அன்பர் அனுப்பிய வாழ்த்துதல் நிருபங்களும், அங்கு உழைத்தவர்களின் படங்களும் அடங்கிய ஞாபகமலர் வெகு அழகாய் 64-பக்கங்களடங்கியதாய்ப் பிரசுரமாகிக் கண்ணைக் கவருவதுமன்றி மனத்தைத் துதிக்கு ஏவுகிறது.

2. விருது நகர்: திருச்சுளியைச் சேர்ந்த முத்தனேரி என்ற கிராமத்தில் விருது நகரிலிருக்கும் மானேஜர் மறைத்திரு G. தானியேல் ஐயர் தனது உடனூழியருடன் செய்துவந்த சுவிசேஷ ஊழியத்தின் பலனாக 60 ஆத்துமாக்கள் ஞானஸ்னனத்திற்கு ஆறுமாதங்களாக ஆயத்தம் செய்யப்பட்டு 5-3-1950-இல் ஞானஸ்னனம் பெற்றுர்கள். இந்த முக்கிய சம்பவத்தில் கலந்து களிப்பெய்திய முக்கிய பிரமுகர்கள் :— மிஷன் டிரெக்ற்றர் A. Baefverfeldt ஐயரும் அம்மாளும், மறைத்திரு C. G. Diehl ஐயரும் அம்மாளும் மறைத்திரு T. Holmberg ஐயரும் அம்மாளும், மறைத்திரு. O. Walther ஐயரும் அம்மாளும், மறைத்திரு. V. G. ஆசீர்வாதம், G. தானியேல் ஐயர்மாரும், மானேஜர் திரு G. T Williams முதலியோர் கிறிஸ்துவின் மந்தையில் புதிதாய்ச் சேர்ந்த இப்புதிய கிறிஸ்தவர்களுக்காக யாவரின் வேண்டுதலும் கோரப்படுகிறது.

3. கோயமாநகர்: மோசஸ் ஞானபரணம் கண்ணுஸ்பத்திரியின் கிளையாகிய போத்தனூர் நிலயத்தைச் சேர்ந்த ஆப்பரேஷன் தியேற்றரையும், ஸ்பெஷல் வார்டுகளையும் ஸ்வீடன் மிஷன் டிரெக்டர் மறைத்திரு. Baefverfeldt ஐயர் சென்ற மார்ச்மீ 13-ம் தேதியாகிய திங்கள் மாலை திறந்து வைத்தார். அவ்வமயம் இந்திய பார்லிமென்ற் உறுப்பினராகிய திரு. டி. ஏ. ராமலிங்கம் செட்டியாரவர்கள் தலைமை தாங்கினுர்கள்.

4. உசிலம்பட்டி சுவீடிஷ் மிஷன் காரியதரிசி A. Bafverfeldt ஐயர் தமது பாரியாருடன் 3.3-1950 வெள்ளி காலை இவ்வூருக்கு விஜயம் செய்தனர். அன்று இங்குள்ள C. S. M. ஆண், பெண் பாடசாலை, மாணவ மாணவி, ஆசிரியர் ஆசிரியை சார்பாக அன்னவருக்கு நல்வரவு வாழ்த்துப் பத்திரங்கள் பல வாசித்துக் கொடுக்கப்பட்டன. விடுதி மாணவிகள் "Merry cobler" என்ற உணர்ச்சி ததும்பும் கவர்ச்சிக்காட்சி ஒன்றைத் திறம்படநடித்து, நவீனநடனங்களால் வந்தவர் மனங்குளிர விருந்தோம்பினர். ஐயரவர்கள், மாணவிகளின் திறமையைப் புகழ்ந்து, கடந்த ஆண்டுகளில் இப்பாடசாலை தொண்டாற்றி இருக்கும் தன்னலமற்ற உன்னத சேவையைப் பெரிதும் பாராட்டி, வாழ்க்கையில் வெற்றிபெறும் வகைகளை விரித்துரைத்து குழுமியோரை வாழ்த்தினர். மாலையில் நடந்த தேவாராதனையில்சபைகுரு சாம். ஜான் ராஜா ஐயர் 'பரணி தைலத்தால் பாவ



நாசரைத் தோய்த்த பாவையின் பாதை" என்ற பொருள் பற்றிப் சந்தர்ப்பத்திற்கேற்ற பிரசங்கம் செய்தபின், கடந்த ஆறுமாதங்களாக வேத அறிவில் வேதாகமஸ்திரி செல்லம்மாள் அவர்களின் விடாமுயற்சியாலும், பாவையர்விடுதி பார்வையாளரின் உதவியாலும் சபைகுருவின் பிரயாசையாலும் போதிக்கப்பட்டுத் தேற்சியுற்ற 23 ஆத்துமாக்கள் குடும்பம் குடும்பமாக திரியேக கடவுளின் நாமத்தினுல் திருமுழுக்குப் பெற்றனர். அவர்களின் ஆத்மீக வளர்ச்சிக்காக ஜெபியுங்கள். ஏ. யாக்கோபு, கை. தொ. ஆசிரியர்.

---

## சபையாரின் ஆவலாதிகள்

(இத்தலைப்பின்கீழ்ச்சபையார் தங்கள் யோசனைகளையும் விருப்பங்களையும் வெளியிடலாம். தங்கள் பெயரையும் விலாசத்தையும் பத்திராதிபருக்குத் தெரிவிக்காதவர்கள் அனுப்பும் கடிதங்கள் வெளிப்பட மாட்டா. நிருப நேயரின் அபிப்பிராயங்களுக்குப் பத்திராதிபர் உத்திரவாதியாகார்.)

---

### போதனு முறைப் பாடசாலைகளில் தேறும் புதிய உபாத்தினிமார்

ஆண்டுதோறும் போதனு முறைப் பாடசாலைகளிலிருந்து நமது சபைப் பெண்கள் நூற்றுக்குக் குறையாமல் வெளிவருகிறுர்கள். அவர்கள் நமது சபையைச் சேர்ந்த பாடசாலைகளில்தான் வேலை தேடுகிறுர்கள். நூற்றுக்குப் 10 பேருக்கு நமது பாடசாலைகளில் வேலை கிடைப்பதில்லை. வேறு வழி இல்லாமல் கிறிஸ்தவ பாதுகாப்பற்ற பாடசாலைகளில் வேலை தேடிப் பெற்றுக் கொள்வதால் அவர்கள் பக்தி நிலை, கற்பு நிலை பங்கப்படுவதற்கான சோதனை ஏற்படுகிறது.

நமது ஊழியர் சட்டப் புத்தகத்தில் விவாகமாகிப் பிள்ளைகள் பெற்றுப் புருஷனுடைய சம்பாத்தியமுடைய உபாத்தினிமாரைச் சில ஆண்டுகளுக்குப்பின் நீக்கவேண்டுமென்கிற சட்டமிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அச்சட்டம் இரத்தாகிவிட்டதா? அன்றிப் பேரப் பிள்ளைகள் உள்ள, சம்பாதிக்கும் பிள்ளைகளையுடைய பாட்டிமாரையும் பாடசாலைகளில் அவர்கள் புருஷரோடும் ஆதரிப்பது புதிதாய்ப் பரீட்சையில் தேறிவரும் பெண்களுக்கு முட்டுக்கட்டை போலிருப்பதாகத் தோன்றுகிறது.

இவ்விஷயத்தை நமது சபையின் கல்வி பரிபாலன சங்கத்தார் பரிசீலனை செய்து, சம்பாதிக்கும் புருஷருள்ள உபாத்தினிமார் தங்கள் சர்ட்டிபிகேற் பூர்த்தியான 10 வருஷங்களுக்குமேல் நமது பாடசாலைகளில் வேலை பார்க்கக் கூடாதென்று சட்டம் ஏற்படுத்தினுல் புதிதாய்ப் போதனுமுறைப் பாடசாலைகளிலிருந்து வெளியேறும் பெண்களின் கிறிஸ்தவ நல்லிருப்புக்கு உதவியாகுமென்று எண்ணுகிறேன். பெண்ணை உயிரோடிழந்த தாய்

## 2. ஆலோசனைச் சங்கத் தேர்தல்

1950ம் ௵ மார்ச்சு மாத அருணோதயத்தைத் திறந்ததும் ஆ. சங்க அவயவங்களின் தேர்தலும் அவர்களுக்கு ஊழிய ஒப்படைப்பும் என்பதைப் பற்றி சினோட் தொடர்புக் கூட்டத்தாரும், கனம் ஆ. சங்கத்தாரும் ஏற்படுத்திய ஒழுங்கை வாசித்ததும் என் மனதில் ஒரு வித கிளர்ச்சி உண்டாயிற்று. உடனே வேத வசனத்தைத் திறந்து வாசிக்க ஆரம்பித்தேன். ஆண்டவர் எனக்கு லூக்கா சுவிசேஷம் 12-ம் அதிகாரம் முதல் பன்னிரண்டு வசனங்களை வாசிக்க எழுப்பினார். இதை வாசிக்கவே 'மாய்மாலம்' என்ற பரிசேய புளித்தமா எவ்வளவாக நமது திருச்சபையில் நுழைகிற தென்ற எண்ணம் என் மனதில் தோன்றி "பேசு, அமர்ந்திராதே" என்று சொன்னதின் பேரில் இந்த என் தாழ்மையான அபிப்பிராயத்தை அருணோதய வாயிலாய் தெரிவிக்க முன் வருகிறேன்.

1947ம் ௵ தெரிந்து கொள்ளப் பட்ட ஆ. சங்கத்தவயவங்களை முதல் முதல் லால்குடி கோயிலில்முன் சொல்லப்பட்ட ஒழுங்குப் பிரகாரம் உத்தியோகத்தில் உறுதிப்படுத்தும் போது, அங்கே பிரசன்னமாயிருந்த பிரதிநிதிகளும் மற்ற அவயவங்களும் என்ன பேசிக் கொண்டவர்களென்பதை விசாரித்து அறிந்து கொள்ள வணக்கமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

மேலும், திருச் சபையின் பரிசுத்த ஊழியத்திற்கென்று தெரிந்தெடுக்கப்படும் நபர்கள் என்று அங்கே சொல்லப்பட்டிருக்கிறது. இதில் மூன்று முக்கிய வார்த்தைகள் உண்டு, 1. திருச்சபை (லௌகிக உலகமல்ல) 2. பரிசுத்தம் (மாய்மால அசுத்த மல்ல) 3. ஊழியம் (ஆதிக்கமும் அதிகாரமுமல்ல). இந்த 3 வார்த்தைகளின் சரியான அர்த்தத்தை யறிந்து அதின்படி செய்யும் அவயங்களே அந்த ஒழுங்கைக் கையாடத் தகுதியுள்ளவர்கள்.

மனித "வோட்"டினால் தெரிந்தெடுக்கப்படும் எந்த நபரும் தனக்கு இன்னின்ன காரியங்களினிமித்தம் 'வோட்' கொடுக்கவேண்டுமென்று கேட்காமலிருக்க முடியாது. அன்றியும் 'திருச் சபையின் பரிசுத்த ஊழியத்துக்கேற்ற அறிவும், விசுவாச உறுதியும், அதற்கான கிறிஸ்தவ சற்குணமும் சாமர்த்தியமும் உடையவர்களென்று நான் உறுதியாக நம்பும் பேர்களுக்கு என் 'வோட்டைக் கொடுப்பேன்' என்று தீர்மானம் பண்ணி பிரதிநிதிகள் சினோட் கூட்டத்திற்கு வருகிறார்களென்று நாம் கிஞ்சித்தும் நம்ப ஏதுவில்லை. அல்லது "ஆலோசனைச் சங்க அவயவமாகத் தேர்தல்பெற நயத்தாலோ, பயமுறுத்துதலாலோ, எவ்வித வாக்களிப்பதினாலோ, பிரதி பலனளிப்பதாகச் சொல்லியோ எவரையும் எனக்கு 'வோட்' தரும்படி வசப்படுத்திக் கொள்ளவில்லையென்று பயபக்தியோடு அறிக்கையிடுகிறேன்" என்று கடவுளுக்கும் தன்சொந்த மனச் சாட்சிக்கும் பொருந்தியபடி சொல்லக்கூடியவர்கள் எத்தனை பேர் இருக்கக்கூடும்?



மனுஷ முறையைக் கையாடும் வரையில், மனுஷ முறைப்படியே நயத்தினாலோ, பயத்தினாலோ பலவித வாக்களிப்பினாலோ 'வோட்' சம்பாதிக்கும் அவயங்களுக்குப் புத்தி சொல்வதோடு விட்டுவிட வேண்டியது. அந்தக் குற்றம் அவரவர்களையே சேர்ந்தது. அப்படிச் செய்து விட்டு மாய்மாலமாக நான் அப்படிச் செய்யவில்லையென்று வாக்குக் கொடுப்பதோ அல்லது வாக்கு வாங்குவதோ மனச்சாட்சியின் பிரமாணத்துக்கும் தேவ வசனத்துக்கும் விரோதம் என்று காணப்படுகிறது. (லூக்கா 12. 10)

ஆகவே, தெரிந்து கொள்ளும் முறையை வேறே விதமாய் மாற்றும்படி தாழ்மையாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

தாம்பரம். 7-1.1950. சா. ப.

---

## 3. தமிழ் சுவி லுத்தரன் சபையில் குருக்களின் சம்பளம் 1950-ம் வருட வரவு சிலவு திட்டமும்

நமது சபைகளில் உத்தரவாதமான ஊழியத்தைச் செய்பவர்கள் நமதுசபை குருக்களே என்று சொன்னால், மிகையாகாது. இவர்கள் குருசேகரங்களில் இருக்கும் சொத்துக்களையும் நிதிகளையும் பரிபாலித்துக் காப்பாற்றும் பொறுப்பை உடையவர். சபை பரிபாலனத்தில் முதுகெலும்பை (Back Bone) ஒத்தவர். இவர்களில் பெரும்பாலோர் கல்வித்தேர்ச்சி பெற்று அதிக அனுபவமும் உள்ளவர்கள். ஆனால், தற்சமயம் நமது சபை குருக்களுடைய மாதச் சம்பளம் குறைவானதாகவே இருக்கிறதென்று ஒத்துக் கொள்ள வேண்டும். தென்னிந்திய திருச்சபை, தமிழ் நாட்டில் வேலை செய்யும் இதர லுத்தரன் சபை, முதலியவைகளில் சேவை புரியும் குருக்களுடைய மாதச் சம்பளத்தை ஒத்துப் பார்த்து நமது சபை குருக்களுக்கும் கட்டுப்படியான சம்பளம் கொடுப்பதே நீதியாகும்.

சமீபத்தில் திருச்சியில் நடைபெற்ற இந்திய கிறிஸ்தவ சங்க வருடாந்திரக் கூட்டத்தில், இந்திய குருமாரின் சம்பளத்தை உயர்த்திக் கொடுக்கச் சிபார்சு செய்ய வேண்டும் என்ற தீர்மானமொன்று நிறை வேறியது. நமது சபையின் பிரமுகர் ஒருவரும், சென்னைமாநகரின் மேயர் டாக்டர் செரியன் (Dr. Cherion) அவர்களும் இத் தீர்மானத்தைப் பலமாக ஆதரித்துப் பேசினார்கள். காரியம் இப்படியிருக்க கடந்த ஜனவரி மாதத்தில் நடைபெற்ற சினோட் தொடர்புக் கூட்டத்தில் சமர்ப்பித்த வரவு செலவு திட்டத்தில், குருமாருடைய சம்பள உயர்த்தியைப்பற்றி யாதொரு திட்டமும் இருந்ததாகத் தெரியவில்லை. இதற்கு மாறாக, சில புதிய உத்தியோக ஸ்தானங்களுக்காக ரூபாய் 16200 ஒதுக்கப்பட்டிருந்தது. நமது குருசேகரங்களைப் பரிபாலித்து வரும் சபை குருக்களுக்குக் கட்டுப்படியான சம்பளமில்லாதிருக்கையில் புதிய உத்தியோகம் வகிப்பவர்

களுக்கு அதிகச் சம்பளம் கொடுப்பதற்குத் திட்டம் போடுவது நியாயத்துக்கு ஒவ்வாததும் சபை குருக்களுடைய நிலையை (Status) குறைப்பதுமாய் காணப்படுகிறது.

தற்சமயம் நமது இந்திய குருமாருக்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடியைக் கவனிக்குங்கால் இப்புதிய உத்தியோக ஸ்தானங்களைச் சற்று நிறுத்தி வைத்து, இதற்காக ஒதுக்கப்பட்ட தொகையிலிருந்து குருமாருடைய சம்பள உயர்த்தியை ஒருவாறு சமாளிக்க இடமுண்டு.

ஒரு காரியத்திற்காகப் போட்ட செலவு திட்டத்தை இதர செலவிற்காக ஒதுக்குவது சரியல்லவாயினும் சினோட் கூட்டத்தாரின் தீர்மானத்தால் இப்படிச் செய்ய இடமுண்டு.

இவ்விஷயத்தை வரப்போகும் சினோட் கூட்டத்தில், சபை ஸ்தானாதிபதிகளில் யாராவது எடுத்துப் பேசுவார்களென்று எதிர்பார்க்கிறேன். குருக்களே இவ்விஷயத்தை எடுத்துப் பேசுவது தங்கள் ஊழிய மேரைக்கு ஒவ்வாதென்று மௌனமாயிருக்கிறார்கள் போலும்.

தரங்கை வாசம், }
28-2-1950 } சீவவாசம் சாலமோன்

---

PEARADJA TARUTUNG February 25, 1950.
TAPANULI — SUMATRA

To the beloved Brethren in Christ

Dear Brethren,

**With joy and gratitude** to our Lord we have arrived at **our residence** (Pearadja Tarutung, Sumatra) on the 22nd of **February**. We felt that the Lord was accompanying us during the six weeks' visit to and in your beautiful country.

Brethren, we herewith want to tender our thanks for all your assistance you gave us during our stay in India. We shall never forget your hospitality. We saw many things (social work and such-like) in your churches which can serve as an example for our Church in Indonesia.

God bless your work in the Churches in India, likewise ours in the Batak Church for the sake of His Holy Name.

Once more, we thank and greet all of you heartily.

*Yours sincerely,*

On behalf of the delegation of the Batak Chuch,

J. SIHOMBING,
**Ephrus** (*Bishop*) **of the H K.B.P.**
**and Rev. SIRAIT:**
**Huria Kristen Batak Protestant, Pearadja Tarutung, Sumatra.**



## கர்த்தர் உயிர்த்தெழுந்த பண்டிகை 1பேது 1, 3-9

கர்த்தர் உயிர்த்தெழுந்து பல வருஷங்களுக்குப் பிறகு பரி: பேதுரு அவருக்கு மகிமையாகப் பாடின பாட்டு இது—கர்த்தர் உயிர்த்தெழுதலுக்குப் பிறகு அவனைச் சந்தித்த போது அவனுக்கு உண்டான சந்தோஷம் அவனுக்குள் நிலைத்திருந்தது. ஆத்துமாவே, உனக்கு இந்தப் பண்டிகை மெய்யாகவே சந்தோஷமான பண்டிகையாயிருக்குமா? நமக்குக் கொடுக்கப் பட்ட வாக்கியம் உயிர்த்தெழுந்தவரால் வரும் நிலையான சந்தோஷம் நிறைந்துள்ளது.

நமக்காக உயிர்த்தெழுந்தவரால் வரும் ஒப்பற்ற பலன்.

I. மறுபிறப்பின் புதிய ஜீவன் II. சுதந்திரத்தின் மேல் நம்பிக்கை 111. நமது உபத்திரவத்தில் ஆறுதல்.

### 1. மறுபிறப்பின் புதிய ஜீவன்

கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலில் மறு பிறப்பின் கிருபையும் பெலனும் அடங்கியிருக்கிறது. ஆகையால்தான் அவர் பரிசுத்த ஞானஸ்நானத்தை உயிர்த்தெழுதலுக்குப் பிற்பாடு ஏற்படுத்தினார். கிறிஸ்து பிதாவின் மகிமையினால் மரித்தோரிலிருந்து எழுப்பப் பட்டது போல் நாமும் புதிதான ஜீவனுள்ளவர்களாய் நடந்து கொள்ளும்படி ஞானஸ்நானத்தின் மூலமாய் அவருடனேகூட மரணத்துக்குள் அடக்கம் பண்ணப்பட்டோம் (ரோ. 6, 4) கர்த்தரோடு விசுவாசத்தினால் உண்டாகும் அதிசயமான ஐக்கியத்திலிருந்து வரும் மறுபிறப்பு தான் உயிர்த்தெழுதலின் உண்மையான கொண்டாட்டம். கர்த்தர் மரித்தோரிலிருந்து எழுந்ததால், நமக்குள்ளும் ஞானஸ்நானத்தால் ஒரு புது மனிதன் உயிர்த்தெழுகிறான்; இவன் மாம்சத்தினால் அல்ல, ஆவியினாலும் பராபரனிடத்திலிருந்தும் பிறந்தவன். கிறிஸ்துவின் கல்லறையிலிருந்து முழுவதும் பாவத்திலே மரித்த மனித ஜாதிக்கென்று ஒரு ஜீவனுள்ள நம்பிக்கை ஒரு நதி போல் ஓடி வருகிறது. சகல பாவங்களோடும் ஆகாத இச்சைகளோடும் பழைய ஆதாம் நம்மில் அமிழ்ந்திச் சாகவும் பராபரனுக்கு முன்பாக நீதியோடும் சுத்தாங்கத்தோடும் என்றென்றைக்கும் பிழைக்கிற புதியமனுஷன் நம்மில் அனுதினமும் உயிர்த்தெழவும் வழி உண்டாயிற்று.

சவுலைப் பவுலாக்கினவர் யார்? கிறிஸ்தவர்களைப்பாடு படுத்தினவனை கிறிஸ்துவுக்காக அனேக பாடுகளைப் பொறுமையோடு சகிக்கக் கூடியவன் ஆக்கினவன் யார்? பகையும் மூர்க்கமும் குடி கொண்டவன் கிறிஸ்தவ அன்பைப் பற்றி தீர்க்கமாய் எழுதவும் அதற்கிசையப் பிழைக்கவும் போதித்தவர் யார்? உயிர்த் தெழுந்த ஆண்டவர் அல்லவா? அவரே உள்ளத்தின் ஆழத்திலும் அனுதின ஜீவியத்திலும் புதிய மனிதனை சிருட்டிப்பவர்.

*11* சுதந்திரத்தின் மேல் நம்பிக்கை. மரணத்தோடே எல்லாம் முடிந்தது என்று கிறிஸ்தவன் சொல்ல மாட்டான். யோபு என்ற பக்தன்: மானிடன் மாண்டபின் ஒழிந்தே போவான்' (14, 10) என்று சொன்னாலும், அவன் பிற்பாடு செய்த அறிக்கை (19, 25) 'என்னை மீட்பவர் உயிரோடிருக்கிறார்'—கிறிஸ்து மெய்யாகவே எழுந்தார் என்பது நமது கிறிஸ்தவ விசுவாசம். ஆதாமுக்குள் எல்லோரும் உயிர்ப்பிக்கப் படுவார்கள். இது நமது நம்பிக்கை. நமது கர்த்தருடைய மகிமையிலும் பாக்கியத்திலும் பங்கு பெறுவோம். நான் எங்கே இருக்கிறேனோ, அங்கே நீர் எனக்குக் கொடுத்தவர்களும் என் மகிமையைக் காணும்படி விரும்புகிறேன் என்று நமது இரட்சகர் சொல்லியிருக்கிறார். கிறிஸ்துவோடு பாடனுபவிப்பவர்கள் அவரோடு மகிமைக்கென்று உயர்த்தப் படுவார்கள். இயேசுவோடு அனுபவிக்கும் சுதந்தரம்: அழிவற்ற சுதந்தரம்—முழு இருதயத்தையும் நிரப்புகிற சுதந்தரம். அது மாசற்ற சுதந்தரம் உலகத்தில் பலவித அநியாயம், சூது, வஞ்சனையினால் சம்பாதிக்கப் படுகிற சுதந்தரத்துக்கு எதிரிடையாக இயேசுவின் பரிசுத்த ஜீவனால், பாடுகளால், மரணத்தால் சம்பாதிக்கப் பட்டது. அது வாடாத சுதந்தரம்.

எப்பேர்ப்பட்ட தனவானுடைய சுதந்தரமும் தேய்ந்து போகும். தேவ சுதந்தரமோ அதன் அழகிலும் இன்பத்திலும் பெருக்கத்திலும் சதாகாலமும் குறைவுபடாத சுதந்திரம்.

### III நமது உபத்திரவத்தில் ஆறுதல்

கிறிஸ்தவனுக்குப் பாடுகளும் உபத்திரவமும் உண்டு. அது உள்ளானதும் புறம்பானதுமாயிருக்கிறது. இருதயத்தில் முள்ளுகள் முளைத்து வேதனையை உண்டாக்கும். புறம்பே சத்துரு தன்னுடைய நெருப்பான அம்புகளை நமது பேரில் தொடுக்கிறான். நமது ஜீவிய பாதையிலே நம்மை வழி மறிக்கிறான். நம்மை ஆண்டவர் சிலுவைப் பள்ளிக் கூடத்தில் வைக்கிற காலமும் உண்டு. ஆத்துமநேசருடைய சகல உபத்திரவங்களிலும் அவர் தமது கண்முன் நிறுத்திய வாக்கியம்: 'அவர் பிழைக்கிறார்' என்பதே. அதுவே அவரை ஆறுதல் படுத்திற்று.

நமது உபத்திரவமும் ஆண்டவரால் குறிக்கப்பட்ட காலத்துக்கே. பொன்னை அக்கினியால் பரீட்சிக்கும் பரீட்சை கொஞ்ச நேரத்துக்கே. அவ்வாறே நமது விசுவாசமாகிய பொன் உபத்ரவமாகிய அக்கினியால் பரீட்சிக்கப்படுவது சில காலமே. அதனால் ஆண்டவர் விரும்புகிற நோக்கம் நிறைவேறின பின்பு அந்த உபத்ரவம் நீங்கிப்போம். உபத்திரவத்திலும் சோதனையிலும் வைக்கப் படுகிற கிறிஸ்தவன் பொறுமையில் தேறினவனாவான். நிந்தையும் திரஸ்காரமும் அடைந்த ரட்சகர் ஜெய வீரராய் எழுந்தார். உபத்ரவ நேரத்தில் இரட்சகரை விசுவாசிக்கிற கிறிஸ்தவன் விசுவாசத்தில்



பலப்பட்டு அவரை நேசிக்கிற நேசத்தில் உறுதிப் படுவான். காவலிலும் சாவிலும் 'சொல்லி முடியாததும் மகிமை நிறைந்ததுமான சந்தோஷம்' அவனை நிரப்பும். **S. D. G.**

### கர்த்தர் உயிர்த்தெழுந்த பண்டிகையின்

2-ம் நாள் அப்: 10, 34—41

நமது பண்டிகைகளின் நோக்கம் இருவிதமானது. நமக்காக நடந்த இரட்சிப்பின் கிரியைகளை நாம் தோத்திரிப்பதால் பராபரன் மகிமைப்படவேண்டும். பண்டிகை கொண்டாடுகிறவர்கள் விசுவாசத்தில் பெலன் அடைந்து அன்பில் அதிகரித்து நம்பிக்கையில் சந்தோஷமடைய வேண்டும். கர்த்தர் உயிர்த்தெழுதலின் கொண்டாட்டமும் இவ்வித நோக்க முடையதே.

கர்த்தர் உயிர்த்தெழுதலின் கொண்டாட்டம் மெய்யான ஆசீர்வாதம் அளிப்பதெப்படி?

1. கிறிஸ்துவிலுள்ள இரட்சிப்பின் பேரில் நமக்கு வாஞ்சை உண்டாக்குவதால். 2. இயேசுநாதரின் அன்பின் பொருட்டு நன்றியை நம்மில் எழுப்புவதால். 3. உயிர்த்தெழுந்த இரட்சகர் பேரில் நமக்கு விசுவாசத்தைக் கொடுப்பதால்.

I. கிறிஸ்துவிலுள்ள இரட்சிப்பின் பேரில் நமக்கு வாஞ்சை உண்டாக்குவதால்.

கொர்நேலியு தேவனுக்குப்பயந்திருந்து நீதியைச் செய்கிறான்; ஆயினும் அவனுடைய உள்ளத்தில் இந்த நீதி திருப்தியை உண்டாக்கவில்லை. நம்மைத் தேவனோடு ஒப்பரவாக்கி நமது உள்ளத்தில் அவர் பேரில் வாஞ்சையை உண்டாக்கும் கிறிஸ்துவினால் மட்டுமே தேவனோடு சமாதானம் பெறுகிறோம்.

II. இயேசுநாதருடைய அன்பின்பொருட்டு நன்றியை எழுப்புவதால்.

பேதுரு கொர்நேலியுவுக்கும் அவன் வீட்டாருக்கும் இயேசுநாதரின் சரித்திரத்தை அவர்கள் மனதில் படும்படியாக ஒரு படம் போல் விபரித்தான்: அவருடைய அன்பின் கிரியைகள், சமாதானத்தின் சுவிசேஷம், பிணியாளிகட்குச்சகாயம், எல்லாருக்காகவும் பட்டபாடுகள், அடைந்த மரணம், இவைகள் மூலமாய் பராபரனண்டை நம்மைச் சேர்க்க விரும்புகிற விருப்பம்—இவைகளை உற்றுக் கேட்கும் உள்ளத்தில் அவர் பேரில் அன்பு கொளுத்தப்படும்.

III. உயிர்த்தெழுந்த ரட்சகர் பேரில் விசுவாசத்தைக் கொடுப்பதால்.

இயேசுநாதரை அவர் உயிர்த்தெழுந்த பிறகு அப்போஸ்தலர் கண்டார்கள், அவர் உபதேசத்தைக் கேட்டார்கள், அவரைத் தொட்

டார்கள், அவர் உயிரோடிருக்கிறார் என்பதற்குச் சாட்சிகளானார்கள். அவர் உயிரோடெழுந்தது நிச்சயம், பராபரனோடு நம்மை ஒப்பரவாக்கினது நிச்சயம், மரணம் அவரால் ஜெயிக்கப்பட்டது நிச்சயம். இதுவே நமது விசுவாசத்துக்குத் திடமான அஸ்திபாரம்: நமது ஜீவகாலம் எல்லாம் கிறிஸ்துவின் சகாயத்தை நமக்கு நிச்சயப்படுத்தும், நாம் மரித்த பிறகு உயிர்த்தெழுவதையும் நிச்சயமாக்கும்.

## கர்த்தர் உயிர்த்தெழுந்த பண்டிகைக்குப் பிந்தின 1-ம் ஞாயிறு 1. யோ-5, 4—12

இயேசுநாதர் மரித்தோரிலிருந்து எழுந்தார். தேவ குமாரனுக்குள் ஜீவன் வெளிப்பட்டது. நாம் பாவ நித்திரையிலிருந்தும் பாவ மரணத்திலிருந்தும் எழுந்து புது ஜீவியம் செய்ய கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலே காரணமாயிற்று. உயிர்த்தெழுந்தவர் பேரில் விசுவாசம் வைக்காமல் இது சாத்தியமல்ல. கர்த்தர் பேரிலுள்ள பூரண விசுவாசமே: என் ஆண்டவரே, என் பராபரனே என்று சொல்லும், பாவத்தின் பேரில் ஜெயம் சிறக்கும். நமது விசுவாசம் பெலனடைய வேண்டும் என்ற ஆசை நமக்குள் எழும்பவே, நாம் இப்போது கிறிஸ்துவின் பேரிலுள்ள விசுவாசத்தைப் பற்றி தியானிப்போம்.

'கிறிஸ்துவைத் தேவ குமாரனைப் பற்றிக் கொள்ளும் விசுவாசம்'

1. விசுவாசத்தின் ஊற்று II. விசுவாசத்தின் பெலன் III. விசுசத்தின் சாட்சி.

### I. விசுவாசத்தின் ஊற்று

(*a*) அது நமது சுபாவ சத்துவம் அல்ல, நாம் வேண்டும் என்றிருப்பதாலும் அல்ல, ஓடுகிறவனாலும் அல்ல.

(*b*) நம்மை மறுபடியும் ஜெனிப்பிக்கும் தெய்வ கிருபையே; மறு பிறப்போடு தேவனுடைய இலவசமான கிருபையால் விசுவாசமும் அவருடைய ஈவாகக் கொடுக்கப்படுகிறது.

### II. விசுவாசத்தின் பெலன்

(*a*) நமக்குள் வாசம் பண்ணும் உலகத்தை, நமது ஜென்ம குணத்தை வெல்லும் (*b*) நமக்கு வெளியே இருக்கும் உலகத்தையும் ஜெயிக்கும்.

### III. விசுவாசத்தின் சாட்சி

விசுவாசத்துக்கு ஆதாரமான சாட்சி:

(*a*) ஆவி, தண்ணீர், இரத்தம். நான் உங்களுடனே பேசும் வசனம் ஆவியும் ஜீவனுமாயிருக்கிறது' என்கிறார் இயேசுநாதர்—ஞானஸ்நானம் கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலால் நம்மை ரட்சிக்கிறது (1. பேது. 3, 21) நமக்காக ஒப்புக் கொடுக்கப்பட்ட கிறிஸ்துவின்



சரீரம் நமக்காகக் சிந்தப்பட்ட அவருடைய ரத்தம் பரி: இராப்போஜனத்தில் நமது பாவமன்னிப்புக்கென்று புசிக்கவும் குடிக்கவும் கொடுக்கப்படுவதே கிறிஸ்துவைப்பற்றிய பகிரங்க சாட்சி.

(*b*) நமது உள்ளத்தின் சாட்சி.

வ. 10. பராபரனுடைய குமாரனிடம் விசுவாசமாய் இருக்கிறவன் அந்த சாட்சியைத் தனக்குள்ளே உடையவன். தேவ வசனத்தின் மூலமாகவும், சாக்கிரமெந்தின் மூலமாகவும் இந்த சாட்சி நமக்குள் வரும்.

S. D. G.

---

## கர்த்தர் உயிர்த்தெழுந்த பண்டிகைக்குப் பிந்தின 2-ம்ஞாயிறு. 1. பேதுரு. 2, 19-25.

கிறிஸ்தவர்களாகிய நாமெல்லாரும் பராபரனுடைய வேலைக்காரரும் அடியாருமாயிருக்கிறோம். நாம் இயேசு கிறிஸ்துவினிமித்தம் பாடுபடுகிறதற்கு அழைக்கப்பட்டுமிருக்கிறோம். ஆதலால் நாம் பராபரனுடைய ஊழியத்திலே பாடு அனுபவிக்கும் போதெல்லாம் நமக்காகப் பாடுபட்ட இயேசுநாதரை நோக்கவேண்டும். ஏனெனில் அவரே நமக்கு 1. நிறைந்த ஆறுதலாகவும் 2. சிறந்த முன்மாதிரியாகவும் இருக்கிறார்.

1. இயேசுநாதர் நமக்கு அருமையுள்ள ஈவு, பராபரன் நமக்காக ஒப்புக் கொடுத்த அவருடைய சொந்த குமாரன், நம்முடைய தீர்க்கதரிசி; பிரதான ஆசாரியர்; இராஜா; பரிசுத்தாவியின் நிறைவினாலே அபிஷேகம் பண்ணப்பட்டவர். 'கிறிஸ்துவும் உங்களுக்காகப் பாடுபட்டு' நமக்காகப் பாடுபட்டார் என்கிற இந்த வார்த்தையிலே எல்லாவற்றிலும் பெரிய ஆறுதல் அடங்கியிருக்கிறது. இயேசுவின் ஜீவன் முழுமையும் அவர் நமக்காகப் பட்டனுபவித்த தொடர்ச்சியான பாடாகவேயிருந்தது. (a) இயேசுநாதர் நம்முடைய இரட்சிப்புக்கென்றே பாடுபட்டார். பாவமுள்ளவர்கள் இரட்சிப்பில்லாதவர்கள். நம்முடைய பாவங்களைத் தாமே தம்முடைய சரீரத்தில் எடுத்துக்கொண்டு மரத்திலேறினார். மெய்யான பாவ நிவிர்த்தியை உண்டாக்குகிற பலியானார். நமக்குப் பெரிய ஆறுதலானார். (b) நாம் பாவங்களுக்குச் செத்து நீதிக்குப் பிழைக்கும்படிக்கு அவர் நம்முடைய பாவங்களுக்காகப் பாடுபட்டார். நாம் ஒவ்வொருவரும் பாவத்துக்குச் செத்துப் போகவேண்டும். "தாவீதரசனைப் போல் தன்னைத் தாழ்த்தும் மனோசேயைப்போல் பாவிமனுஷியைப் போல் மனம் பதைத்த பேதுருபோல் தேவனுக்கேறாத தீமைசெய்தேனென்று-கூவிப்புலம்புநல் ஆவியின் சொற்படி" என்பதுபோல் நமது பாவங்களை அறிந்து அறிக்கையிட்டு, பாவமன்னிப்புப்பெற்று உயிரோடிருக்கிற சகல நாளும் பயமில்லாமல் பரிசுத்தத்தோடும் நீதியோடும் பராபரனுக்கு முன்பாக நடந்து அவருக்கு ஊழியம் செய்யவேண்டும். இது பெரிய ஆறுதல். (c) நாம் பராபரனண்

டைக்குத் திரும்புவதற்கென்றும் இயேசு பாடுபட்டார். ‘ சிதறுண்ட ஆடுகளைப்போல் இருந்தீர்கள் ’ “ ஆடுபோல் வழி தப்பி அவனவன் மனமொப்பி-கேடடைந்தோர் பாவத்தை கிறிஸ்துமேல் சுமத்தினீர்.- ஐயா, உமது சித்தம் ஆகிடவே வேணும்-மெய்யாய் எனது சித்தம் வெகு மோசமே காணும்.” என்றபடி அங்குமிங்கும் அலையும் நமது பாவசித்தத்தை ஒடித்து, நன்மையும் கிருபையுமுள்ள தெய்வசித்தத்தின்படி பராபரனண்டைக்குத் திருப்பப்பட்டுக் கிறிஸ்துவுக்குள் செழித்து வாழுகிறோம். இது பெரிய ஆறுதல்.

2. ‘நீங்கள் தம்முடைய காலடிகளைத் தொடர்ந்து வர உங்களுக்குப் பிரமாணம் பின் வைத்தார்’ இயேசுநாதர் நமக்கு சிறந்த முன்மாதிரி ; உத்தமமான முன்மாதிரி. மனுஷர்கள் எல்லாரும் பாவிகள் இயேசு ஒருவரே பாவமற்றவர். தீமைக்கு நன்மையே செய்கிறவர். “ மனதார சாவுமட்டும்-பிதாவின் சித்தமே ஆகட்டும்-என்றீர், அமர்ந்த இயேசுவே ” என்றபடி பிதாவின் சித்தம் பாவமனித ஜாதி இரட்சிக்கப்படவேண்டும், அதற்கென்று தம் குமாரனாகிய இயேசு பாடுபடவேண்டும் ; பாடுகளை உள்ளபடி அமைதியோடும், பொறுமையோடும் சகிக்க வேண்டும் ; அப்பொழுதுதான் எதிர்பார்க்கப்படும் நன்மை ஆசீர்வாதம் உண்டாகும். இதை இயேசு நன்கறிந்தார். ஆதலால் அவர் மனுஷர்களுடைய பாவங்கள் நிமித்தம் எல்லாப்பாடுகளையும் குற்றமற்றவரும் கீழ்ப்படிந்தவரும் பொறுமையுள்ளவருமாக எப்படிச் சகித்துக் கொண்டாரென்பதைக் குறித்துப் பேதுரு இங்கே சொல்லுகிறார். “ ஆசாரிமார் முறைப்பாடானது சொல்ல- ஆண்டவனார் மகா பொறுமையாகவே நின்றார்.” “ சத்துருக்கள் சொன்ன குற்றச் சாட்டுதற்கெல்லாம்-தற்பரனார் பேசாமல் சாது வாய் நின்றார்.” அநேக வார்த்தைகளினாலே தம்மைக் கேட்ட ஏரோ இராஜாவுக்கு அவர் பிரத்தியுத்தரம் ஒன்றும் சொல்லாதிருந்தார். வளர்த்த கடா மார்பில் பாய்ந்ததுபோல் தமதுமேல் பாய்ந்த யூதாஸ் காரியோத்தை அவர் பட்சமாய் எச்சரித்து, சிநேகிதனே, எதற்கு வந்திருக்கிறாயென்றார். அவர் தம்முடைய முகத்திலே துப்பி, வாரினால் தம்மை அடித்துச் சிலுவையில் தம்மை அறைந்தவர்களுக்காகச் செபம் பண்ணி, பிதாவே, அவர்களுக்கு மன்னியும் என்று மன்றாடினார். இதெல்லாம் நமக்குப் பிரமாணமாகவும் முன்மாதிரியாகவும் பின்வைக்கப்பட்டிருக்கிறது. அமைதியின் பிரமாணம் - பொறுமை பின் பிரமாணம் - அன்பின் பிரமாணம் - ஜெபத்தின் பிரமாணம்- மன்னிப்பின் பிரமாணம் - தாழ்மையின் பிரமாணம் - கீழ்ப்படிதலின் பிரமாணம் - சகித்தலின் பிரமாணம் - “குற்றமின்றி, - க்ரோதமற்று- எல்லா இகழ்ச்சியையும் பட்டு-மன்னித்தீர், சாந்த இயேசுவே - தெய்வ வீட்டுக்காய் அல்லாமல் - நீர் வேறெரிச்சலைக் காட்டாமல் - இருந்தீர், ஆட்டுக்குட்டியே - நான் அந்த பத்தியாய் - மிகுந்த சாதமாய்-இருக்கட்டும். - ஆ, இயேசுவே, நான் உமக்கே -ஒப்பாகச் சாந்தமாகவும்.”



## கர்த்தர் உயிர்த்தெழுந்த பண்டிகைக்குப் பிந்தின 3-ம் ஞாயிறு

### 1. பேதுரு. 2. 11—17.

இந்த ஞாயிற்றுக்கிழமைக்கு ‘ கெம்பீரியுங்கள் ’ என்கிற பெயர் கொடுக்கப்பட்டது. இயேசுநாதர் மரித்தோரிலிருந்து எழுந்ததினால் தாம் பராபரனுடைய சுதனென்றும் தம்முடைய மரணத்தினால் நமக் குப் பாவ மன்னிப்பையும் நித்திய ஜீவனையும் மோட்சத்தையும் சம் பாதித்த நம்முடைய இரட்சகரென்றும் ரூபிக்கப்பட்டார். இதுவே நாம் இடைவிடாமல் கெம்பீரிப்பதற்கு ஆதாரம். நாம் விடுதலை பெற் றோம். ஆகையால் கெம்பீரிப்போம். ஆகிலும் (1) அதிகாரங்களோடு போராட வேண்டும். 2. அதிகாரங்களுக்குக் கீழ்ப்படிய வேண்டும்.

விடுதலை பெற்றிருந்தும் பெற்ற விடுதலையைத் துர்க்குணத்துக்கு மூடலாகக் கொண்டிராமல் பராபரனுடைய அடிமைகளாயிருங்கள என்பதை மறக்கவே கூடாது.

1. முதல் அதிகாரங்கள்—கடவுளுக்கு விரோதமான, நமது பரிசுத்த ஜீவியத்தைக் கெடுக்கிற, நல் நடக்கையை அவத்தமாக்குகிற அதிகாரங்கள்-ஆத்துமத்துக்கு விரோதமாகப் போர் செய்யும் மாமிச இச்சைகள்-பாவம் வாசமாயிருக்கிற நமது மாமிசத்தோடு பொல் லாத உலகமும் நரகத்தின் வல்லமைகளும் சேருகின்றன. இந்த மூன்று விதமான எதிராளிகளால் உண்மையுள்ள கிறிஸ்தவர்களுக்கு இடைவிடாத கடினமான போர் உண்டாகிறது. மாமிச இச்சை கள் ஆத்துமத்துக்கு விரோதமாகப் போர் செய்யும்போது பராபரன் நமக்குள் உண்டாக்கின ஞான ஜீவனாகிய விசுவாசத்தை அவைகள் மறுபடியும் நெருக்கிப் போட்டு பாவத்தின் அடிமைத்தனத்துக்கு நம்மை உட்படுத்துகின்றன. மாமிசத்தின் இச்சைகள் : கலாத். 5. 19-21. மாமிசத்தின் பொல்லாத சிந்தனைகளுக்கும் இச்சைகளுக் கும் பழக்கங்களுக்கும் விரோதமாகப் போர் செய்யும்படிக்கு ஒரு பட்டயத்தைப் பரி. பேதுரு நமது கைகளிலே கொடுக்கிறார்-பராபர னுக்குப் பயந்திருங்கள் என்று அவர் சொல்லுவதே அப்பட்டயம்.

கிறிஸ்து பாவத்தின் அடிமைத்தனத்திற்கு நம்மை விடுதலையாக் கினார், ஆனால், பாவத்துக்கு விரோதமாகப் போராட வேண்டிய இடைவிடாத போராட்டத்துக்கு அவர் நம்மை விடுதலையாக்கவில்லை. விடுதலையைத் துர்க்குணத்துக்கு மூடலாகக் கொண்டிராமல் என்பது நமக்குப் பெரிய எச்சரிப்பு, கிறிஸ்தவனின் ஜீவியம் போராட்ட ஜீவியம். கிறிஸ்து நம்முடைய சொந்த நீதியின் பேரிலிருக்கும் கள்ள நம்பிக்கைக்கு நம்மை விடுதலையாக்கினார். ஆனால், நற்கிரியை களினால் பலன் காட்டும் சிநேகத்துக்கு அவர் நம்மை விடுதலையாக்க வில்லை. நம்முடைய நற்கிரியைகள் உலகத்தாருக்கு முன்பாக விசே ஷித்துப் பிரகாசிக்கிற தன்னிஷ்டகிரியைகளாயிராமல், பராபரனுக் குக் கீழ்ப்படிதலாகவே இருக்க வேண்டும்

**2.** இரண்டாவது அதிகாரங்கள்-இந்த அதிகாரங்களை அப் போஸ்தலன் மனுஷ அதிகாரங்களென்று சொல்லுகிருர்-லௌகீக அதிகாரங்களெல்லாம், மனுஷர்களுக்காகவும் மனுஷர்களுக்குள்ளே யிருக்கிற ஒழுங்கின்படியும் பிரமாணத்தின்படியும் ஏற்படுத்தப்படு கிறது. என்ருலும் பராபரனல் உண்டாகாத அதிகாரமில்லை ; உண் டான அதிகாரங்கள் பராபரனலே கட்டளையிடப்பட்டவைகள். ஆகையால் அதிகாரத்தை எதிர்க்கிறவன் பராபரனுடைய கட்டளை களை எதிர்க்கிருன்-தனக்குத்தானே ஆக்கினையைச் சம்பாதிக்கிருன். உண்மையுள்ள கிறிஸ்தவர்கள் கர்த்தருடைய இந்தக் கட்டளையையுங் கைக்கொண்டு தாங்கள் சஞ்சரிக்கிற தேசத்திலுள்ள அதிகாரிகளுக் குக் கீழ்ப்படிந்திருக்கிருர்கள். கர்த்தர் நிமித்தமாகவும் கர்த்தருக் குள்ளும் நாம் லௌகீக அதிகாரிகளுக்கும் நியாயாதிபதிகளுக்கும் கீழ்ப்படிந்திருக்க வேண்டும். அவர்கள் கர்த்தருடைய திருவசனத் துக்கு விரோதமாக எதையாகிலும் செய்ய நமக்குக் கற்பித்தால் அதற்கு நாம் கீழ்ப்படியக் கூடாது.

கிறிஸ்து மாய்கைக்குக் கீழ்ப்பட்டதாயிருக்கிற சிருஷ்டிக்குச் செய்யும் ஊழியத்துக்கு நம்மை விடுதலையாக்கினர். ஆனல், எல்லா மனுஷ அதிகாரக் கட்டளைக்கும் கீழ்ப்படிகிற கீழ்ப்படிதலுக்கு அவர் நம்மை விடுதலையாக்கவில்லை. எல்லா தேவ பக்தியிலும் இலக்கணத் திலும் அமளியற்ற அமர்ந்த ஜீவனம் பண்ணும்படிக்குக் கர்த்தர் நமக்கு நல்ல அதிகாரிகளைக் கொடுக்க வேண்டுமென்று நாம் பக்தி வைராக்கியமாய்க் கெஞ்சிக் கேட்க வேண்டும். R. D.

## செபதப ஒரு சந்தியின் பெருநாள் எசா. 55. 6. 7.

**இக்காரியை ஏன் அனுசரிக்க வேண்டும்?** நாம் கர்த்தருடைய ம ணத்தினலும் உயிர்த்தெழுதலினலும் அடைந்த பராபரனுடைய தயவு நம்மைக் குணப்படுதலுக்கு ஏவுகிறபடியினலும், நாம் குணப்படுதலி லே பரிசுத்த ஆவியின் பண்டிகைக்கு நம்மை ஆயத்தம் பண்ண வேண்டியிருப்பதினலுமே.

கர்த்தரண்டைக்கு மனந்திரும்புதலாகிய குணப்படுதல்.

1. நாம் யாரண்டைக்கு மனந்திரும்ப வேண்டும். 2. நாம் அவரண்டைக்கு எப்படி மனந்திரும்ப வேண்டும்.

1. நம்முடைய பராபரனகிய கர்த்தரும் பரிசுத்தமானவரண் டைக்கு. அவர் பரித்தராயிருக்கிற படியினலே எல்லா அசுத்தத்தையும் பாவத்தையும் பகைத்து அருவருக்கிருர். தங்கள் பாவங்களிலே நிலைத்திருக்கிற பாவிகளோடு எதிர்த்து நிற்கிருர். ஆகிலும் தம்மண் டைக்கு மனந்திரும்புகிறவர்கள்மேல் அவர் மனமுருகுவார். பிரயா சப்பட்டு பாரம் சுமந்தவர்களாகத் தம்மண்டைக்கு வருகிறவர்களுக்கு மன்னிக்கிறதற்கு அவர் தயை பெருத்திருக்கிருர். ஓய், தாகமாயிருக் கிற நீங்கள் எல்லாரும் தண்ணீர்களண்டைக்கு வாருங்கள், பணமில்



லாதவர்களே! நீங்கள் வந்து பணமுமின்றி, விலையுமின்றித் திராட்சப் பழ இரசமும் பாலும் கொள்ளுங்கள் என்று ஏசாயா சொல்லுகிருர். தீர்க்கதரிசி அப்பத்தையும் பற்றிப் பேசுகிருர். தண்ணீர், திராட்சைப் பழ இரசம், பால், அப்பம் என்றவை நம்முடைய சரீர பிழைப்புக்கு வேண்டியவை நம்முடைய ஆத்துமாக்கள் நம் நாதர் இயேசுவின் இராச்சியத்திலே அனுபவிக்கிற கிருபைகளுக்கு இவை அடையாளங் கள். இயேசு பரிசுத்த ஆவியையும், திருவசனத்தையும், விசுவாசத் தையும், பாவ மன்னிப்பையும், நித்திய ஜீவனையும், மோட்சத்தையும் நமக்களித்து நமது ஆத்துமாக்களைப் பிழைக்கப்பண்ணுகிருர். நமது பாவங்களை மன்னித்து நம்மைத் தம்முடைய எல்லாப் பரம நன்மை களினலும் அலங்கரிக்கிற இயேசுவண்டைத் திரும்பக்கடவோம்.

2. ($a$) நாம் பசிதாகத்தோடு மனந்திரும்ப வேண்டும். பசிதாக மில்லாதவர்களுக்குத் திரளான அப்பம், தண்ணீர், திராட்சைப்பழ இரசம், பால் இவற்றைக் கொடுத்தாலும் அவர்கள் புசித்துக் குடிக்க மாட்டார்கள். அப்படியே ஞானகாரியங்களிலு மிருக்கிறது. நாம் ஞானகாரியங்களிலும் காத்தருடைய திருவசனத்திலடங்கிய ஞான பொக்கிஷங்கள்பேரிலும் பசிதாகமாயிருக்கவேண்டும், ($b$) கர்த்தர் கண்டு பிடிக்கப் படுகையில் அவரைத் தேடவேண்டும். நாம் ஜீவனே டிருந்து அவருடைய திருவசனத்தின் பிரசங்கத்தைக் கேட்கக்கூடிய வரைக்குந்தான் திருவசனத்திலே அவர் நமக்குச் சமீபமாயிருக்கிருர். இது நாங்கள் பிரசங்கிக்கிற விசுவாசத்தின் வார்த்தைதானே. ஆகை யால் நீ முழு மனத்தோடும் காத்தரண்டைக்குத் திரும்ப மனதாயிருந் தால் எல்லாவற்றிற்கும்மேல் கர்த்தருடைய திருவசனத்தை ஆத்தும தாகத்தோடு கேட்டுத் தியானிக்கவேண்டும். ($c$) நாம் கர்த்தரை நோக் கிக் கூப்பிடவும் வேண்டும். கர்த்தர் தம்முடைய பரிசுத்த ஆவியை நமக்குக் கொடுக்காவிட்டால்நாம் திருவசனத்தை அறிந்துக்கொள்ள வும் நன்றும் சற்குணமுள்ள இருதயத்திலேவைத் திருக்கவும் அதின் படியே செய்யவும் அதை இரட்சிப்புக்கென்று காத்துக்கொள்ளவும் முடியாது. ஆனல், கர்த்தரை நோக்கி உண்மையாய் கெஞ்சிக் கேட் கிறவர்களுக்கு அவர்கள் ஜெபத்தின்படியே கொடுக்கப்படும். ($d$) நம் வழிகளையும் நம் நினைவுகளையும் விட்டு விட்டுக் கர்த்தருடைய வழிகளின் படியும் அவருடைய நினைவுகளின் படியும் நடக்க வேண்டும் நாமெல்லாரும் வழிதப்பிப்போய் ஏகமாய்க் கெட்டுப்போனேம்- நாமெல்லாரும் ஆகாதவர்கள்-நன்மை செய்கிறவன் நமக்குள் ஒருவ னகிலுமில்லை-நமக்குள் உணர்வுள்ளவனுஞ் சமாதானத்தினுடைய வழியை அறிந்தவனுமில்லை. நம்முடைய வழிகள் கேட்டின் வழி களும் நம்முடைய நினைவுகள் கேட்டின் நினைவுகளுமாம். நாம் சத்தி யமும் ஜீவனுமாகிய இயேசுவை விசுவாசத்தினல் பற்றிக்கொண்டு வழியாகிய அவரை விசுவாசத்தால் பின் சென்று அவரது காலடி களைத் தொடர்ந்து வரவேண்டும்: R. D.

# பரம் களிக்கிறது பாசம் கதறுகிறது.

எங்கள் அருமை தகப்பனார் கனம் R. சின்னப்பன் உபதேசியாரவர்கள் மது திருச்சபையில் 30-வருஷம் உபாத்தியாயராகவும், உபதேசியாராகவும் பல இடங்களில் பயன்பட உழைத்தார்கள். பென்ஷன் பெற்றுவரும் காலத்திலும்கூட ஆண்டவரின் திருப்பணியை ஆனந்தத்தோடு நடத்தி தாங் கையில் வசித்து வந்தார்கள். பிந்திய காலத்தில் மதுரையிலுள்ள தனது குமாரன் Mr. S. ஜெயநாதன் கம்பவுண்டர் வீட்டில் சகல சௌகரியங்களுட னும், ஜெபதபங்களுடனும் வசித்து வருங்கால் திடீரென்று 22-2-50சாயங் பல் புதன்கிழமை காலை $2\frac{1}{4}$-மணிக்கு மாரடைப்பால் பீடிக்கப் பட்டு நல்ல ஆயத்தத்தோடு கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரை அடைந்தார்கள்.

அன்று சாயந்திரம் 5-மணிக்கே Rev I. A. அப்பாதுரை ஐயரவர்க ளால் லூக்கா. 2 : 29 வசனத்தின் பேரில் மிகுந்த ஆறுதலான துக்கப் பிரசங் கம் செய்யப்பட்டது. மக்கள், மருமக்கள், பேரப்பிள்ளைகள், இனத்தார், நண்பர்கள், புறமத சிநேகிதர்கள் புடைசூழ சகல கிறிஸ்தவ மரியாதையுடன் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று வுத்தரன் பழைய கல்லறைத் தோட் டத்தில் கல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

இடைவிடா ஜெபம், உழைப்பு, இனத்தார் சிநேகிதர்களைக்கண்டு ஆனந் தித்தல், ஆராதனைகளுக்கும், துக்கவீடுகளுக்கும் முந்திக்கொண்டு செல்லல் முதலிய அரிய நற்குணங்களை எங்களுக்கு பின் வைத்துப் போயிருக்கிறார்கள்

" இவர்கள் தன்னால் கூடியதைச் செய்தார்கள் "

சங்கீதம் 90 : 10. வயது. 90

நேரிலும், கடிதங்கள் மூலமாயும் ஆறுதல் படுத்தின யாவருக்கும் எங் கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

பிள்ளைகள்,

கிரம்மர்புரம்,
மதுரை.
28-2-50

1. Mrs. தவமணிதேவசிகாமணி — பெங்களூர்
2. Mr. S. பவுல்ஹென்றி — மதுரை
3. ,, S. ஜெயநாதன் — ,,
4. ,, S. சார்லஸ் விக்டர் — ,,
5. Mrs. எமிலி அலெக்ஸாண்டர் — பொன்மலை

---

## THE L. H. & T. E. FUND.

There will D. V. be a meeting of the Members of the L. H. & T. E. Fund on the second day of the Triennial Synod of the T. E. L. C to be held at Tranquebar between 26th&28th. April, 1950 to transact the following business.

I Election of office bearers. II. Audit Report III. Definition of the word "Dependent" appearing in para 25 of the constitution.

Madras,
10—3—50

E. PAUL GNANABHARANAM
*Secretary.*
10, Bishop Waller Avenue West, Mylapore.

## மரண அறிக்கை.

முதுகுளத்தூர் C. S. M. Higher Ele. School-ல் வேலை பார்த்து வந்த Mr. D John Swamiyah என்னும் எங்கள் ஆசிரியர் சிலகாலம் அதிக வியாதியாயிருந்து, திருப்பத்தூர் மிஷன் ஆஸ்பத்திரியில் 8-3-1950 காலை 3-30-மணிக்கு கர்த்தருக்குள் அமைதியாய் நித்திரையடைந்தார். அன்னவரின் சடலம் சகல கிறிஸ்தவ மரியாதையுடன் அன்று மாலை 5-30 மணிக்கு, திருப்பத்தூர் லுத்தரன் சபையின் உத்தான தோட்டத்தில், உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று வனம். ஜோசப் துரைக்கண் பிரசங்கியாரால் நல்லடக்கம் செய்யப்பட்டது. அவரின் பொறுமை எங்களின் ஜீவியத்திற்குச் சிறந்த முன் மாதிரி.

(Inserted by the pupils, the Staff and Management of the C. S. M. Higher Elementary School, Mudukulathur. Ramnad District.)

## Help to German Missionaries.

| | | | | |
|---|---|---|---|---|
| As per previous statement in March issue | Rs. | 6,423 | 10 | 3 |
| Satur Pastorate, thro. Rev. G. D Francis | ... | 5 | 0 | 0 |
| Collections thro. Cate. S. Samuel, Dindigul | ... | 20 | 0 | 0 |
| Pattukottai congregation | ... | 25 | 0 | 0 |
| Aneikadu | ... | 20 | 0 | 0 |
| Headmistress Amirtham, Tranquebar House | ... | 5 | 0 | 0 |
| Mettupati congregation, thro. Rev. M. S Gnanasigamani | ... | 25 | 0 | 0 |
| Mr and Mrs D. Daniel, Tanjavoor | ... | 5 | 0 | 0 |
| N. N. ... | ... | 2 | 0 | 0 |
| Total | Rs. | 6,530 | 10 | 3 |

Tranquebar House,
*Tiruchy, 15-3-50.*

J. SANDEGREN
Bishop.

## கிறிஸ்தவ சிஷ்ய சங்கம்.

### 29-வது மாநாடு

இடம்: மாநாட்டாண்மைக்கழக உயர்நிலைப்பள்ளி, பட்டுக்கோட்டை.
தேதி: ஏப்ரல் 30, மே 1, 2, 3 உ
வசதி: பட்டுக்கோட்டை கிறிஸ்தவ சிஷ்ய சங்கத் தொண்டர்ப் படையினர் மாநாட்டிற்கு வருவோரைத் தஞ்சாவூர் சந்திப்பிலிருந்து பட்டுக்கோட்டைக்கு மோட்டார் வண்டிகளில் ஏற்றிச் செல்வர். பிரதிநிதிகள் தஞ்சைக்கு ஏப்ரல் 30உ காலை வண்டிகளில் வருவது நன்று.

பெண்கள் தங்குவதற்குத் தனி வசதி உண்டு. அன்பர் திரண்டு வருக. மூதூர் பட்டுக்கோட்டைச் சபையினரை ஊக்குக. அமலன் அருள்பெற்றேகுக.

**A S. தனராஜ்**
C. S. S. வட்டச்செயலாளர்

**தே. ஜெயசேகரன்**
செயலாளர், C S. S. பட்டுக்கோட்டை

*Edited by Rev. S. Gnanamanickam, Trichinopoly.*
*Published by The Tranquebar publishing House Abirami St, Madras-7.*
*printed by B. Kanniappan at the Venus Printing Press*
*3, Krishnappa Mudaly St, Vepery, Madras-7.*

